Registered No. M. 1500.

"NAVASAKTI"

# நவசக்தி

| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளிநாடு—வருடசந்தா | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

**விளம்பர விகிதம்**

பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 0
சில்லரை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு ௧ | சுக்கிலஹு வைகாசிமீ ௨௩௨ (5—6—29) புதன்கிழமை | பரல் ௩௩

## மதுரையில் "நவசக்தி" கிடைக்கும் இடங்கள்

ச. மாரியப்பன்,
397, வடக்கு மாசி வீதி,
மதுரை.

ஏ. டி. ஜானகிராம் நாயுடு ஸன்ஸ்,
பட்டணம் பொடிக் கடை,
அம்மன் சன்னதி,
மதுரை.

சுப்பையா பிள்ளை,
பட்டணம் பொடிக் கடை,
மேலக்கோபுரத் தெரு,
மதுரை.

## திருமூலர்

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்
தன்னை யறியு மறிவை யறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே.

அறிவு வடிவென் றறியாத வென்னை
அறிவு வடிவென் றருள்செய்தா னந்தி
அறிவு வடிவென் றருளா லறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே.

அறிவுக் கழிவில்லை யாக்கமு மில்லை
அறிவுக் கறிவல்ல தாதாரமு மில்லை
அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்
டறைகின் றனமறை யீறுக டாமே.

## சிலோனில் 'நவசக்தி' கிடைக்கும் இடம்

S. சண்முகம் பிள்ளை
செ. 4, கைமான்ஸ் கேட்,
கொழும்பு.

## நாகர்கோவிலில் 'நவசக்தி' கிடைக்கும் இடம்

எக்ஸ்பிரஸ்
நியூஸ் ஏஜன்ஸி,
நாகர்கோவில்.

A. கோவிந்தசாமி செட்டியார்,
நியூஸ் ஏஜண்டு,
கூனூர் R. S.

## கணித சோதிடம்

பரகித கணிதப்படி கணிதஞ் செய்து பலன்கள் கூறப்படும். ஒரு வருஷத்திற்கு மாதவாரி பலன்கள் நுட்பமாயும் விவரமாயும் எழுதி அனுப்ப ரூபாய் இரண்டு. ஆருடம் 5 கேள்விகளுக்கு விவரமான பதில் எழுதி அனுப்ப ரூபாய் ஒன்று. விவாக விஷயம் ரூபாய் ஒன்று. விவாக விஷயத்தைப் பற்றி நாங்கள் எழுதி அனுப்புவதைக் கொண்டு பெண்ணுக்குப் புருஷனும் புருஷனுக்குப் பெண்ணும் இன்னாரென்று வெகு சுலபமாய் நிச்சயிக்கலாம். எங்களிடம் அருமையான பூர்வீக ஜோதிட நூற்கள் பலவுள்ளதால், நாங்கள் எழுதி அனுப்பும் பலன்கள் பொதுப் பலன்களாயிராமல் விவரமாகவும் சாஸ்திர சமாகவு மிருக்கும். உங்கள் ஜாதக காலாவதிகடிதம் எழுதும் நோக்கத்தையாவது தெரிவியுங்கள்.

தே. ஆறுமுக செட்டி,
முதலியார் பேட்டை, புதுச்சேரி.

## பாராயணத் திருப்புகழ்

அழகிய சித்திரப் படங்களுள்ளது
பலபிரதிகளைக் கொண்டு ஆராய்ந்து பிழையற பரிசோதிக்கப் பெற்றது

பிறவிப் பெருங்கடலை நீந்துவதற்கு முக்கியமான சாதனங்களுள் இக்கலிகாலத்தில் முருகனைப் பற்றிய பக்தியே எல்லாப் பலன்களையும் அளிக்க வல்லதென்ற பெரியோர் அருளியுள்ளார். இத்திருப்புகழில் தமிழின் சுவையல்லாமல், புராண மந்திர தந்திர இரகசியங்களும் இருக்கின்றன.

இவற்றை நாள்தோறும் விளங்குக அம்முருகப் பெருமானின் அருளைப் பெறமாறு, முக்கியமான 235 பாக்களை ஸ்தல வாரகத் தொகுத்து இந்த புஸ்தகம் அமைக்கப் பட்டுள்ளது. இவைதனைப் பாராயணம் செய்தால் ஸ்தல யாத்திரையின் பலனும் ஏற்படும். பத்திரிகாசிரியர்களால் இந்தப் பதிப்பு மிகவும் பாராட்டப் பெற்றிருக்கின்றது. திருப்புகழின் சந்தச் சுவைக்கு ஏற்றவாறு இப்புத்தகமும் கைக்கு ஓரணிகலனாக செய்யப்பட்டுள்ளது. கம்பராமாயணப் புகழ்பெற்ற வசிஷ்ட பாரதியார் முகவுரையோடு கூடியது.

விலை ரூபா 1.

மூர்த்தி புஸ்தகசாலை, 173, தங்கசாலை வீதி, மதராஸ்.

## திருக்குறள் விளக்கம்

இந்நூற்கண் திருவள்ளுவர் திருக்குறள் மூலமும், பரிமேலழகர் உரையும், விளக்கமும் சேர்ந்திருக்கின்றன. இவ்விளக்கவுரை ஆசிரியர் மாணவர்க்கு அறிவுறுத்துவது போல வரையப் பட்டிருக்கிறது. திருக்குறள் பயில்வோர்க்கு இப்பதிப்புப் பெரும்பயன் செய்யுமென்பதில் ஐயமில்லை. நல்ல காகிதத்தில் அழகு பெற அச்சிடப் பட்டுளது.

| | | | |
|---|---|---|---|
| அறத்துப்பால் காலிகோ பைபிண்டு விலை ரூபா | 3 | 4 | 0 |
| பொருட்பால் ,, | 4 | 8 | 0 |
| காமத்துப்பால் ,, | 1 | 12 | 0 |

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

## இனாம்!

24 ரகங்கள் கொண்ட பள்ளியறைக்கான அழகிய பாரிஸ் மாதர்களின் அசல் போட்டோ போஸ்டு கார்டுகளின் விலை ரூ. 1-9-0. (ஆப்டோன் படமல்ல.) தபால் செலவு 5 அணா. தபால் செலவுடன் முன்பண மனுப்புவோருக்கு ஷை 30 கார்டுகள் அனுப்புவோம்.

பிரெஞ்சு போட்டோ ஸ்டோர்ஸ்,
மவுண்ட் ரோட், சென்னை.

Uptodate fashionable wrought iron RAILINGS NOTED FOR BEAUTY STRENGTH & DURABILITY.

குறைந்த விலையில் உயர்ந்த - நூதன

"இரும்பு கிராதிகள்" "ஸ்பிரிங் கதவுகள்"
"காம்பவுண்ட் கேட்டுகள்"

முதலான இரும்பு சாமான்கள் கட்டிடங்களுக்கு ஏற்றவாறு, அழகாகவும், உறுதியாகவும், குறித்த காலத்தில் தயார்செய்து கொடுக்கப்படும். கேட்லாக் இனாம்!

ஸ்ரீ கிருஷ்ணா அயர்ன் ஒர்க்ஸ், மதுரை.

நஞ்சன்கூடு, பிஷக்ரத்ன ஆயுர்வேத வித்வான் பி. வி. பண்டிட்ஸ்

## நஞ்சன்கூடு "சத் வைத்தியசாலை"

NANJANGUD SADVAIDYASALA

"நஞ்சன்கூடு பல்பொடி," சாவனப்ராசா, பிருங்காமலக தைலம்.
குழந்தைகளுக்கு:—ஸ்ரீகர கஸ்தூரி மாத்திரை, கோரோஜனை மாத்திரை, சித்ர தைலம், பால சஞ்சீவினி.
ஸோல் ஏஜெண்டுகள்:—யூனைடெட் கன்ஸர்ன், 54, பந்தர் தெரு, மதராஸ். (முக்கிய ஊர்களில் ஏஜெண்டுகள்.)

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

Best copy available

Maximum light given

"நவசக்தி" ஆசிரியர்

## திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

எழுதிய நூல்கள்

### தமிழ்த் தென்றல்

தமிழ்நாட்டுப் பண்டைப் பெருமை, தாய் மொழிப் பற்று, பிறப்புரிமை, உரிமை வேட்கை, தேசபக்தி, சுயராஜ்யப்பேறு, ஒற்றுமை, சகோதர நேயம், ஊக்கம், காந்தியடிகள் அறம், ஒத்துழையா இயக்கச் சிறப்பு, அவ்வியக்க முறைகளால் நாட்டுக்குள்ள நலன் முதலிய பொருள்கள் இந்நூற்கண் ஆங்காங்கே மிளிர்தல் காணலாம். அணிந்துரையுடன் 480-பக்கங்கொண்டது. நல்ல காகிதத்தில் அழகிய எழுத்தில் அச்சிடப் பட்டுளது. காலிகோ பயிண்டு விலை ரூ. **2.**

***

### தமிழ் நூல்களில் பௌத்தம்

வேண்டுவோர் 5 அணா தபால் முத்திரை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

விலை அணா 4.

***

### கடவுள் காட்சியும் தாயுமானாரும்

மன மாசுகளை நல்லறிவால் கழுவி உண்மையில் மூழ்கி நின்ற அநுபூதிமான்களில் ஒருவராகிய தாயுமானார் அருளிச்செய்த "ஐவகை எனும் பூதம்" என்னும் திருப்பாட்டைப் பீடிகையாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுளது. நூலின் திரண்ட கருத்து மெய்ம்மையில் கடவுள் காட்சி பெறலா மென்பது. விலை அணா 4. வேண்டுவோர் ஐந்து அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். ஏக காலத்தில் 12-புத்தகங்கள் வாங்குவோருக்குத் தபால் செலவு இனம்.

### முருகன் அல்லது அழகு

இரண்டாம் பதிப்பு

விரிவாக எழுதப்பட்டது

இந்நூற்கண் முருகன் சொற்பொருள் விளக்கம், அழகினியல், இளமைப்பேறு, இயற்கை மாண்பு, கோன்பு வழிபாடுகளின் திறம், முருகனடியார் இயல்பு முதலியன ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலை முற்றும் பயில்வோர் உள்ளத்தில், இயற்கை வழிபாட்டில் ஆர்வம், ஒரே கடவுள் ஒரே நெறி என்னும் உறுதி, எவ்வுயிர்க்குந் தீங்கு நினையாப்பேரறம் முதலியன நிலவும். 224-பக்கங்கொண்டது நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டுளது. கலிகோ பயிண்டு விலை ரூபா 1.

***

### சைவத்தின் சமரசம்

இந்நூற்கண் சமயத்தின் இயல்பு இஃது என்பதும், எல்லாச்சமயங்களும் ஒரு கடவுளையே பல பெயரால் பல வழியில் போற்றுகின்றன என்பதும், சமயங்கள் பல வாய்க்கிடப்பினும் அவைகள் யாவும் சமரசத்தையே குறிக்கொண்டு நிற்கின்றனஎன்பதும், அச்சமரசமே சைவமென்பதும், பிறப்பையொட்டி உயர்வு தாழ்வு பாராட்டாமை, கைம்மாறற்ற பணி, பிறர் குற்றம்பொறுத்தல், பாவ மன்னிப்பு முதலியன சைவசமயத்தில் சிறப்பாக விருக்கின்றன என்பதும், அருள்-கருணை - இரக்கம் - தயை உள்ள விடங்களிலெல்லாம் சைவம் மிளிரும் என்பதும், சைவம் ஒரு சமயம் அன்றென்பதும் பிறவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. இரண்டாம் பதிப்பு விலை அணா 8.

***

### என் கடன் பணிசெய்து கிடப்பதே

இந்நூலில் பணியின் பெருமை விரிவாக ஓதப்பட்டிருக்கிறது. கடவுள்பணி, சராசரப்பணி, சிறப்பாகத் தேசப்பணி ஆகிய இப்பணிகளை இந்நூலில் காணலாம். இஃதொரு கருமயோக நூல்; காலத்துக் கேற்றது. இரண்டாம் பதிப்பு விலை அணா 8.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

சிலோன் ஏஜண்டு:—
S. சண்முகம் பிள்ளை,
நெ. 4, கைமான்ஸ் கேட், கொழும்பு.



### மயர்ஸ்

உலகத்திற் சிறந்த பம்புகள் எல்லா வற்றிற்கும் உபயோகப் படும்

இந்தியாவில் சோல் ஏஜண்டுகள்:—
லிமாயி பிரதர்ஸ் லிமிடெட்,
1-173, பிராட்வே,
போஸ்ட் பாக்ஸ் 202, மதராஸ்.



பெட்ரோமாக்ஸ் லைட்

மாண்டில், குளோப், அதன் தனித்தனி சாமான்கள் எல்லாம் ஸமயமாய் கிடைக்கும்.

பூச்சிவண்டர் கியாஸ் லைட்

உறுதியானது ரிபேர் ஏற்படாதது. இந்த மேக்கர் மதராஸில் கிடைக்காது.

முழுவிபர கியாட்லாக், ஒரு அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்.

Importers—
ஸன் கம்பெனி, தஞ்சாவூர்.



### கைத்தொழில் வணிக இரகசியம்

இதில் சோப்புகள், மெழுகுவத்தி, நெருப்புக்குச்சி, பெப்பர்மெண்ட், பிஸ்கத்து, கேக்குகள், வாசனை எண்ணெய்கள், அத்தர்கள், சாம்பிராணி வத்திகள், பன்னீர், சர்பத்துகள், இங்கி, பூட்ப் லீஷ், வார்னிஷ், சாயங்கள், பலவித மருந்துகள், காகிதம், பென்சல் முதலியவைகள் செய்யும் முறைகளுடன் 200-பக்கங்கள் கொண்ட பெரிய புஸ்தகம். ரூ. 1—8—0.

எல்லாப் புஸ்தக வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மகாராஜா புஸ்தகசாலை,
அருணாசல முதலி வீதி, மதராஸ்.



தங்கமெடல் பரிசுபெற்ற மஹாமந்திர

### ஜெபாக்ஷா தாயத்து

இதை அணிந்தால் நினைத்த காரியம் ஜெயம்; வியாபார விர்த்தி; தனலாபம்; அதிகார வசியம்; தைரியம்; பரீக்ஷையில் ஜெயம்; சுறுசுறுப்பு முதலியன உண்டாகும். ஏவல், சூன்யாதி ஏறு. பேய், பிசாசுகள் முதலிய சேஷ்டைகளும் தேகாதியந்த வலியும் நீங்கும். வேண்டியவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

| | |
|---|---|
| தங்கதாயத்து | ரூ. 5—0—0 |
| வெள்ளி தாயத்து | ரூ. 1—4—0 |
| ஸ்பெஷல் தாயத்து | ரூ. 11—4—0 |

எம். ஏ. ரஜ்ஜாக்கு மறைக்காயர்,
மஹாமந்திர ஜெபாலயம், கடலூர், O. T.



### கணித ஜோதிடம்

கணிதரீதியாய் ஆராய்ந்து பலன் கூறப்பட்டுவருகிறது. ஒரு வருஷ மாத வாரியாக அல்லது திசாபுத்தி படிக்கு இரண்டு வருஷ பலன் எழுத ரூபா 2. மாதம் ஒன்றுக்கு ஒன்பது பலனாக, ஒரு வருஷப் பலன் எழுத ரூ. 10. ஒரு வருஷத்திற்குத் தினபலன் எழுத ரூபா 20. ஜாதகம் இல்லாதவர் லெட்டர் எழுதும் நேரத்தையும் பெயரையும் எழுதவும். எழுகேள்விகளுக்கு ரூபா 1. பொருத்தம் பார்க்க ரூபா 1. ஜாதகக்குறிப்பு எழுத ரூபா 2. ஆதிநூல்களைக் கொண்டே ஆராய்ச்சி யுற்றிருக்கின்றோம். ஒருவருடைய ஆயுளை இன்ன வருஷம் மாதம் தினம் நட்சத்திரம் இறந்துபோகும் நேரம் உள்பட தெரிந்து அத்துடன் அஷ்டவர்க்க பலன் எழுத ரூபா 25. சந்தான மில்லாதவர்க்கு ஏற்படும் பதின் மூன்று தோஷங்களையும், இன்ன தோஷம் அஃது அடைந்த விபரம் அதன் நிவர்த்தி இவற்றைத் தெரிந்து சொல்ல ரூபா 5. அன்னிய நாட்டு நண்பர்கள் முன் பணம் அனுப்ப வேண்டியது.

அப்பாஜி ஜோஸ்யர்,
நெ. 321, ஐரோட், திருவல்லிக்கேணி, மதராஸ்.

ஸ்ரீமான் திரு. வி. கலியாண சுந்தர முதலியார் அவர்கள் அபிப்பிராயம் :

"ஸ்ரீமான் சூ. அப்பாஜி ஜோசியர் அவர்களை யான் ஏறக்குறைய ஓராண்டளவாக அறிவேன். அவரது சோதிடப் புலமையின் ஆற்றலையும், பலன்கூறும் திறத்தையும் ஆராய்ந்து உணரும் வாய்ப்பு பலமுறை எனக்குக் கிடைத்தது. அவர் பண்டைச் சோதிட நூல்பல ஆராய்ந்து தெளிவு பெற்றிருத்தலையுணர்ந்தேன். அவர் பலர்க்குக் கூறிய பலன்கள் நடைமுறையில் உறுதிப் பெற்றதையும் கண்டேன். கணிதக் குறிப்புத் திறம்படப்பொறிக்கும் ஆற்றல் அவர்பால் அமைந்திருத்தல் வியக்கத்தக்கதா யிருக்கிறது. தமிழ்நாட்டிலுள்ள மிச்ச் சில சோதிடக் கலைஞர்களுள் ஸ்ரீமான் அப்பாஜி ஜோசியரும் ஒருவர் என்று கூறல் மிகையாகாது. ஸ்ரீமான் அப்பாஜி ஜோசியர் அவர்கள் தம் வாழ்வில் வெற்றி பெறுமாறு அறுமுகக் கடவுள் திருவடியை வழுத்துகிறேன்."



வெளியாய் விட்டது! வெளியாய் விட்டது!!

### கௌஹர்ஜான் காதல்

இரண்டாம்பாகம் வெளியாய் விட்டது!!!

இந்நாவலின் முதற்பாகத்தைப் படித்தவர்களுக்கு இதன் மேன்மையைக் கூறவேண்டியதில்லை. இந்நாவல் நாவலுலகிலேயே தலைசிறந்ததாகும். பல கலர் ஹாப்டோன் படங்களடங்கியது.

360 பக்கங் கொண்ட முதற்பாகம் ரூ. 1 8 0 } வி. பி.
380 பக்கங் கொண்ட 2-ம் பாகம் ரூ. 1 8 0 } வேறு.

தாருல் இஸ்லாம் புத்தகசாலை, P. O. Box 15, சென்னை.



### ஞானம் வைத்தியவித்தியா

### யௌவனம்

என்னும் பொக்கிஷத்தையும் ஆரோக்கிய மென்னும் குன்றாத செல்வத்தையும் விரும்பும் ஒவ்வொரு ஸ்திரீயும் புருஷனும் இப்புத்தகத்தை வாசித்து சுகமடையலாம்.

ராஜவைத்திய நாராயணஜீ கேசவஜீ,
1/94, சைனாப்பஜார், மதராஸ்.



உயர்ந்த இலை! குறைந்த விலை!!

### சிவபுரி - - - புகையிலை

உலகு புகழ்வது எது? உற்சாகத்தின் ஊற்று எது? மணம் மிகுந்தது எது? குணம் சிறந்தது எது? சிதம்பரத்திற்கு அடுத்த சிவபுரி புகையிலையே! தேவைக் கெழுதுங்கள்! ஒரு முறை பரீக்ஷித்தால் உண்மை விளங்கும்.

கத்தை ஒன்றுக்கு 40 இலைகள் கொண்டது

| | | | |
|---|---|---|---|
| 1 நெ. | கத்தை | விலை ரூபா | 5-0 |
| 2 நெ. | ,, | ,, | 4-4 |
| 3 நெ. | ,, | ,, | 3-12 |
| 4 நெ. | ,, | ,, | 3-0 |

வி. பி. தபால் பாக்கிங் சார்ஜ் வேறு.

வி.கே.எஸ். ஐயர் & கோ,
புகையிலை வியாபாரம், சிதம்பரம்.

வந்தேமாதரம்

# நவசக்தி

“என்கடன் பணிசெய்து கிடப்பதே”

சிலம்பு ௬ | சுக்கில ௵ வைகாசி ௴ ௨௩௨ (5—6—29) புதன்கிழமை | பரல் ௩௩

## இராமலிங்க சுவாமிகள்

### சமரச சன்மார்க்க சங்கம்

திரு. வி. க.

நிகழும் விபவ ஆண்டு, தைத்திங்கள் பூசநாள் விழாவையொட்டி வடலூரில் (26-1-29) கூடிய சமரச சன்மார்க்க மகாநாட்டில், திரு. வி. கலியாணசுந்தர முதலியார் தலைமை வகித்து நிகழ்த்திய முன்னுரை வருமாறு :—

IX

(௩.) பேறு

மகன் ஆண்டவன் திருவருளில் காதல்கொண்டு, கசிந்து கசிந்து உருகி, அழுது அழுது, குறைபாடுகளை முறையிட்டு வேண்டுதல் செய்யச் செய்ய, ஆண்டவன் திருவருள் ஞாயிறென எழுந்து, இருள் கடிதல் ஒரு தலை. திருவருட் பேற்றிற்கு வேண்டற்பாலது குறைகளை முறையிட்டுக் கசிந்து கசிந்து உருகும் அழுகை அழுகை யென்று மேலே ஒல்லும் வகை வலியுறுத்தி யிருக்கிறேன். அவ்வழுகை நீர் நெஞ்சினைத் தூய்மைப் படுத்தும். இதனை அநுபவத்திற் காணலாம்.

* * *

இராமலிங்க சுவாமிகள் குறைகளை முறையிட்டார்; கசிந்து கசிந்து உருகினார்; அழுதார்; மனமாசைக் கழுவினார்; ஆண்டவன் அருள் பெற்றார்; இன்புற்றார்; இறுதியில் பெறற்கரிய பெரும் பேறெய்தினார். இப் பேற்றிற்கு அடிப்படை எது? அவர் ஆண்டவனிடத்துக் கொண்ட உறுதி உறுதியேயாகும்.

* * *

(i) உறுதி நிலை

உறுதியைக் குலைக்கவல்ல தொல்லைகள் இடையிடையே நிகழ்வது முண்டு. அத்தொல்லைகள் பெத்த நிலையில்மட்டுமல்ல, சீவன் முத்தநிலையிலும் புகுந்து துன்புறுத்தி மகனைத்தங்கள் வயப்படுத்த முயலும். அவ்வேளைகளில் அன்பன் மிக எச்சரிக்கையா யிருத்தல் வேண்டும். சோதனைகட்கு இரையாகாது மகன் தன்னைக் காக்கப் புகுவதே அறிவுடைமை. இடையிடை விழ நேரினும் மீண்டும் எழுந்து இறைவனடியைப் பற்றிக்கொள்ளல்வேண்டும்.

* * *

முழுத்திருவருள் படியும் வரை இடையிடை முனைப்பெழுந்து தாக்கித்தாக்கி அடியவனது முயற்சிக்குக் கேடு சூழும். அத்தாக்குதலால்நிகழுங்குறைபாடுகளை ஆண்டவனிடத்து முறையிட்டு முனைப்பின் ஆற்றலைச் சாய்க்க அடியவன் முயலல்வேண்டும். ஆண்டவனிடத்து உறுதி கொண்டு குறைபாடுகளை முறையிட்டுத் தன்னை ஆண்டவனிடம் ஒப்புவிக்கும் மகன் திருவருட்பேறெய்தல் ஒருதலை. இதற்கு இராமலிங்கசுவாமிகளின்வாழ்வு பேரிலக்கியமாக நிற்கிறது.

“ தனிப்பெருந் தலைவரே தாயவரே யென் றந்தையரே பெருந்தய வுடையவரே, பனிப்பறுத் தெனையாண்ட பாம்பரே யெம்பார் வதிபுர ஞானப்பதி சிதம்பரரே, இனிச்சிறு பொழுதேனுந் தாழ்ந்திடல் வேண்டா மிறையவரே யுமையிங்குக் கண்டலலா, லகித்திய வுலகினைப் பார்க்கவு மாட்டே னருட்பெருஞ் சோதியீ ராணை நும் மீதே.”

“ சத்தியஞ் சத்திய மருட்பெருஞ் சோதித் தந்தையரே யெனைத்தாங்கு கின்றீரே, உத்தமமாகு நுந்திருச் சமுகத்தென் னுடல் பொருளா வியையுவப் புடன ளித்தேன், இத்தகை யுலகிடை யவைக்குமென் றனக்குமேதஞ் சுதந்திரமில்லை யிங்கினிநீர், எத்தகையாயினுஞ் செய்து கொள்கிற்பீ ரெனைப் பள்ளியெழுப்பி மெய்யின்பந் தந்தீரே.”

“ காய்ந்திடு மனத்தான் போன்றனன் சிறிதுங் கனிவிலான் காமமா திகளாம், பாய்ந்திடு வேடப் பயல்களா லெனக்குப் பயம்புரி வித்தனன் பலகால், தேய்ந்திடு மதியென் றெண்ணினன் குறையாத் திருமதி யெனநினைந் தறியான், சாய்ந்தவிச் செவிலிகையிலே யென்னைத் தந்தது சாலுமென் றுரயே.”

“ கலையெலாம் புகலுங் கதியெலாங் கதியிற் காண்கின்ற காட்சிக ளெல்லாம், நிலையெலா நிலையினோர்ந் தனுபவஞ் செய்கின்ற வெலாம் விளங்கிடப் பொதுவின், மலைவிலாச் சோதியருட் பெருஞ் செங்கோல் வாய்மையா னடத்துமோர் தனிமைத் தலைவனே யெனது தந்தையே நினது தனையனுன் றளருத லழகோ.”

“ செய்வகை யென்னெனத் திகைத்தேன் றிகையே லென்றொரு நாள் திருமேனி காட்டியெனைத் தெளிவித்தாய் நீயே, பொய்வகை யன்றிது நினதுபுந்தி யறிந்ததுவே பொன்னடியே துணையென நானென் னுயிர் வைத் திருந்தேன், எவ்வகை யென்னம் பெருமா னருள்புரிவா னென்றே யெந்தைவர வெதிர்பார்த்தே யின்னுமிருக்கின்றேன், ஐவகை யிவ்வுயிர்த் துயரமினிப் பொறுக்க மாட்டே னருட்சோதிப் பெரும் பொருளை யளித்தருளிப் பொழுதே.”

“ உன்னை மறந்திடுவேனோ மறப்பறியேன் மறந்தா லுயிர்விடுவேன் கணந்தரியே னுன்றுணை யிதுநீ, யென்னை மறந்திடுவாயோ மறந்திடுவா யெனில்யா னென்னசெய்வே னெங்குறுவே னெவர்க்குரைப்பே னெந்தா, யன்னையினுந் தயவுடையாய் நீமறந்தா யெனினு மகிலமெலா மளித்திடு மின்னருள் மறவாதென்றே, யின்னுமிகக் களித்திங்கே யிருக்கின்றேன் மறவே லிதுதருண மருட் சோதி யெனக்கு விரைந்தருளே.”

“ தெருவிடத்தே விளையாடித் திரிந்தவெனை வலிந்தே சிவமாலை யணிந்தனையச் சிறுவயதில் இந்த, வுருவிடத்தே நினக்கிருந்த வாசையெலா மிக்கா ளோடியதோ புதியவொரு வுருவுவிழைந் ததுவோ, கருவிடத்தி லெனைக்காத்த காவலனே யுனதுகால் பிடித்தேன் விடுவேனோ கைப்பிடி யன்றதுதான், வெருவிடத் தென்னுயிர்ப் பிடிகாணுயி ரகன்றாலன்றி விடமாட்டேன் விடமாட்டேன் விடமாட் டேனனே.”

* * *

திருவருள் நிலை:

முனைப்புடன் போராடிப் போராடி அதனைச் செயலறச் செய்ததும் ஒரு பெரும் மாறுதல் அன்பன்பாலுறும். “யான்” என்னும் நினைவே அற்றுப் போகும். “யான்” என்னும் அவ்விடத்தில் திருவருள் குடிபுகும். திருவருள் புகுந்ததும் மகன் செயல்களெல்லாம் அத்திரு வருளின் செயல்களாகும். “அவனன்றி ஓரணுவும் அசையாது” என்னும் பேருரைக்குத் திருவருட் செல்வன் பொருளாவன். ஆண்டவன் ஆட்டத் தான்ஆடுவதை அவன் உணர்வன். தனக்கென ஒன்றின்மையை அவன் செயலில் விளங்கப் பெறுவன். முனைப்புள்ளவரை இவ்வுணர்வு பிறத்தல் அரிது. ஆண்டவன் தன்னை இயக்குவதை யுணராது, தானே இயங்குவதாகக்கருதி ஆணவத்தின் சேயாக் கிடக்கும் ஒருவன், உண்மை யுணர்ந்து, முனைப்பைச் செகுத்துத் திருவருட்பே றெய்திய பின்னை, ஆண்டவன் சேயாகிறான். “ஆணவத் தோடத்துவிதமானபடி மெய்ஞ்ஞானத் தாணுவினோடத்து விதஞ்சாரு நாள் எந்நாளோ” என வரூஉந் தாயுமானார் திருவாக்கை நோக்குக.

* * *

இராமலிங்க சுவாமிகள் முனைப்பை வீழ்த்தி, ஆண்டவன் அருள் பெற்றுத் தற்சுதந்திர மிழந்து, ஆண்டவன் வயப்பட்டு நின்றதைப் பல விடங்களில் பாடி யுள்ளார். அப்பாக்களில் சில வருமாறு :—

“என்னுலோர் துரும்புமசைத் தெடுக்க முடியாதே யெல்லாஞ்செய் வல்லவனென் றெல்லாரும்புகலும், நின்னு லிவ்வுலகிடை நான் வாழ்கின்றேனரசே நின்னருள்பெற் றழியாத நிலையை யடைந்திடவென், றன்னுலோர் சுதந்திரமு மில்லைகண்டாய்நினது சகலசுதந்திரத்தை யென்பாற் றயவுசெயல் வேண்டும், பின்னுலென் றிடிற் சிறிதுந்தரித் திருக்க மாட்டேன் போனை யுரைத்தேனென் பேராசை யிதுவே.”

“இப்பாரி லுடலாவி பொருளு மூன்றுங் கொடுத்தேமற் றெனக் கென்றிங்கே எப்பாலுஞ் சுதந்திர மோரிறையுமிலையருட் சோதி யியற்கை யென்னுந், துப்பாய வுடலாதி தருவாயோ வின்னுமெனைச் சோதிப் பாயோ, அப்பா நின் றிருவுளத்தை யறியேனிவ் வடியேனு லாவ தென்னே.”

“ பாட்டுவித்தாற் பாடுகின்றேன் பணிவித்தாற் பணிகின்றேன் பதியே நின்னைக், கூட்டுவித்தாற் கூடுகின்றேன் குழைவித்தாற் குழைகின்றேன் குறித்த ஊணை, யூட்டுவித்தா லுண்கின்றே னுறக்குவித்தா லுறங்குகின்றே னுறங்கா தென்று, மாட்டுவித்தா லாடுகின்றே னந்தோவிச் சிறியேனு லாவ தென்னே.”

“ உடுப்பவனு முண்பவனு நானே யென்னவு நாணமுறுவ தென்றாய், நடுப்பவனுந் தடைதீர்த்துக் கொடுப்பவனும் பிறப்பிறப்புத் தன்னைநீக்கி, யெடுப்பவனுங் காப்பவனு மின்பவநுபவ வுருவாயென் னுள்ளோங்கி, யடுப்பவனுநீ யென்று லந்தோவிச் சிறியேனு லாவ தென்னே.”

தற் சுதந்திர மிழந்து, “எல்லாம் ஆண்டவன் செயல்” என்று ஆண்டவன் வயப்பட்டு நிற்கும் வரை பல திறமாயாப் போராட்டங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும். மகன் முற்றும் ஆண்டவன் வயப்பட்ட பின்னரே போராட்டங்கள் தொலையும். அந்நிலையில் அவனை மாயாமனம் என் செய்யும்? ஆணவம் என் செய்யும்? பிற என் செய்யும்? அவைகள் தலைகாட்டவும் இடம் பெறுதல் இல்லையென்க.

* * *

இராமலிங்க சுவாமிகள் திருவருளால் விழுங்கப்பெற்று ஆண்டவன் பிள்ளையானதும், மன முதலிய பேய்களெல்லாம் தத்தம் அரசிழந்து நாணியோடி யொளித்தன. அவைகளை முன்னிலைப் படுத்திச் சுவாமிகள் பேசிய பேச்சுக்கள் ஆண்டவன் திருவருள் மீது வேட்கை எழுப்புகின்றன. அவ் வீரமொழிகளை யான் பன்முறை படித்துப் படித்து, ஆண்டவன் திருவருள் நிலை குறித்து இறுமாப் பெய்துவதுண்டு. அவ்விறுமாப்பு நமக்கு வேண்டும். “இறுமாந் திருப்பன் கொலோ ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டுச் சிறுமான் ஏந்திய சேவடிக் கீழ்ச் சென்றங்கு இறுமாந் திருப்பன் கொலோ” என வரூஉம் அப்பர் இறுமாப்பு மொழிகளைக்கண்டு இறுமாப்புக் கொள்ளுங்கள். மக்களாகப் பிறந்த நாம் திருவருளில் “நாமார்க்குங் குடியல்லோம்” என்று இறுமாந்து நிற்றல் வேண்டும்; நிற்கப்பயிலல் வேண்டும். மக்களாகப் பிறந்து மனதிற்கா அடிமையாகி மாள்வது? ஆணவத்திற்கா அடிமையாகி அழிவது? மக்களாகப் பிறந்தவர்கள் ஆண்டவனுக்கே அடிமைப்பட்டுத் திருவருட்பே றெய்த விரைந்து நிற்றல் வேண்டும். அன்பர்களே! இராமலிங்க

சுவாமிகள் வாழ்வைநோக்குங்கள். அவர்கள்வாழ்வு ஆண்டவன் அருளைபேருகிக் கொண்டியங்கியதை யுணருங்கள்.

* * *

இராமலிங்க சுவாமிகள் முயன்று முயன்று, பல்கால் உழைத்து உழைத்து ஆண்டவன் அருள் பெற்றார்; ஆண்டவன் பிள்ளையானார். அடிகள் ஆண்டவன் பிள்ளையான பின்னர் மனமும், அகங்காரமும், பிறவும் தத்தம் ஆற்றலிழந்து அடங்கி ஒடுங்கி யொழிந்தன. அவைகளைச் சுவாமிகள் முன்னிலைப் படுத்தி ஏசி ஏசிப்பாடிய பாக்களை - அன்பர்களே! படித்துப் பாருங்கள். மனமும் அகங்காரமும், அவைகளின் இனமும் நம்மை என்னென்ன செய்கின்றன? அவைகள் சுவாமிகளிடம் என் செய்கின்றன? எத்துணையோ நாள் அரசு செலுத்திய மனமாதியன சுவாமிகளின்முன் வலியிழந்து செயலின்றிக் கிடக்கின்றன. பாவம்! பாவம்! அவைகளின் நிலை இரங்கத்தக்கதாயிருக்கிறது.

"மனமெனுமோர் பேய்க்குரங்கு மடைப்பயலே நீதான் மற்றவர்போ லெனைநினைந்து மருட்டாதே கண்டாய், இனமுறவென் சொல்வழியே யிருத்தியெனிற் சுகமாய் இருந்திடுநீ யென்சொல்வழி யேற்றிலையானலோ, நினை யளவுன் னதிகாரஞ் செல்லவொட்டே னுலகஞ் சிரிக்கவுனை யடக்கிடுவேன் திருவருளாற் கணத்தே, நனவிலெனை யறியாயோ யாரெனவிங் கிருந்தாய் ஞான சபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே"

"அகங்கார மெனும்பொல்லா அடவாதிப் பயலே அடுக்கடுக்கா யெடுக்கின்றா யடுத்து முடுக்கின்றாய், செகங்காணத் தலைசாலுந் தெரியாம லலைந்து, திரிகின்றாய் நின்செபந்தான் சிறிதுகட வாது, இகங்காண வடங்குகநீ யடங்காயேற் கணத்கே இருந்தவிடந் தெரியாதே யெரிந்திடச்செய் திடுவேன், சுகங்காண வென்றனைநீ யறியாயோ நான்றான் சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றபிள்ளை நானே"

"கோபமெனும் புலைப்பயலே காமவலைப் பயலே சொடுமோகக் கடைப்பயலே குறும்பு மதப் பயலே, தாபவுலோ பப்பயலே மாற்சரியப் பயலே தயவுடனிங் கிசைக்கின்றேன் றாழ்த்திருக்கா தீர்காண், தீபமெலாங் கடந்திருள்சேர் நிலஞ்சாரப் போவீர் சிறிதுபொழு திருந்தாலும் திண்ணமிங்கே யழிவீர், சாபமுறு முன்னமறிந் தோடுமினோ வென்னைத் தானறியீர் தனித்தலைவன் தலைப்பிள்ளை நானே"

எனவரூஉம் பாக்களையோதி யுணர்ந்து ஆண்டவன் திருவருளில் காதல் கொள்ளுங்கள்.

* * *

மனவொடுக்கமும், ஆணவ நீக்கமும், பிறதத்துவங்களின் அழிவும் பெற்ற அருளாளர்கள் எண்ணும் எண்ணங்களும், பேசும் பேச்சுகளும் யாருடையன? அவைகள் ஆண்டவனுடையன என்று சொல்லவும் வேண்டுமோ? ஆண்டவன் உடைமையெல்லாம் அவர்களுடைமையாகின்றன என்று சுருங்கச் சொல்லலாம்.

"நானுரைக்கும் வார்த்தையெலாம் நாயகன்றன் வார்த்தை நம்புமினோ நமரங்காள் மற்ற ருணமிதுவே, வானுரைத்த மணிமன்றில் நடம்புரியெம் பெருமான் வரவெதிர் கொண் டவனருளால் வரங்களெலாம் பெறவே, தேனுரைக்கு முளமினிக்க வெழுகின்றேனீவீர் தெரிந்தடைந் தென்னுடனெழுமின் சித்திபெற லாகும், ஏனுரைத்தே னிரக்கத்தா லெடுத்துரைத்தேன் கண்டீர் யானடையுஞ் சுகத்தினைநீர் தானடைதல் குறித்தே."

"எல்லா வுலகமு மென்வச மாயின வெல்லா வுயிர்களு மென்னுயிராயின, எல்லா ஞானமு மென்ஞான மாயின வெல்லா வித்தையு மென்வித்தை யாயின, எல்லாப் போகமு மென்போக மாயின வெல்லா வின்பமு மென்னின்ப மாயின. எல்லாம் வல்ல சிற்றம்பலத் தென்னப்ப ரெல்லாம் நல்கி யென்னுள்ளத் தன்ளாரே.

என்றார் சுவாமிகளும்.

* * *

தத்துவங்க ளெல்லாம் ஒடுங்கப் பெற்று, ஆண்டவன் அருளில் திளைத்துக் கிடப்போர்க்கு உலகியல் வேற்றுமைகளும், சாதிமத வேற்றுமைகளும், மற்ற வெறிகளும் தோன்றவே மாட்டா. அவர்கட்கு எல்லாம் ஒன்றாகவே தோன்றும். அப்பெருநிலையே சமரச சன்மார்க்கமென்பது. சமரச சன்மார்க்கத்தைப் பற்றி முன்னரும் பேசியுள்ளேன். ஈண்டுச் சுவாமிகள் மொழிகளிற் சிலவற்றை மட்டும் பொறித்துச் செல்கிறேன்.

"கிழக்குவெளுத் ததுகருணை யருட்ஜோதி யுதயங் கிடைத்ததென துளக்கமலங் கிளர்ந்ததென தகத்தே, சழக்குவெளுத் ததுசாதி யாச்சிரமா சாரஞ் சமயமதா சாரமெனச் சண்டையிட்ட கலக, வழக்குவெளுத் ததுபலவாம் பொய்ந்நூல்கற் றவர்தம் மனம்வெளுத்து வாய்வெளுத்து வாயுறவா யித்த, முழக்குவெளுத் ததுசிவமே பொருளெனுஞ்சன் மார்க்க முழுநெறியிற் பரநாத முரசுமுழங் கியதே."

"ஆதியு நடுவு மந்தமு மில்லா வருட்பெருஞ் சோதியென் னுளத்தே, நீதியிற் கலந்து நிறைந்தது நானு நித்திய ஞயினே னுலகீர். சாதியு மதமுஞ் சமயமுந் தவிர்த்தே சத்திய சுத்தசன் மார்க்க, வீதியி லுமைத்தானிறுவுவ துண்மை விளம்பினேன் வம்மினோ விரைந்தே."

"தெய்வங்கள் பலபல சிந்தை செய்வாருஞ் சேர்கதி பலபல செப்புகின்றாரும், பொய்வந்த கலைபல புகன்றிடு வாரும் பொய்ச் சமயாதியை மெச்சுகின்றாரும், மெய்வந்த திருவருள் விளக்கமொன் றில்லார் மேல்வினை வறிகிலர் வீண்கழிக் கின்றார், எய்வந்த அன்பொழித்த வர்க்கறி வருள்வீ ரெனைப் பள்ளி யெழுப்பி மெய்யின்பந் தந்தீரே."

"வெறிக்குஞ் சமயக் குழியில் விழவிரைந்தேன் றன்னை விழாத வகை, மறிக்கு மொரு போறி வளித்த வள்ளற் கொடியே மனக்கொடியைச், செறிக்கும் பெரியருளத் தோங்குந் தெய்வக் கொடியே சிவஞானங், குறிக்குங் கொடியே யானந்தக் கொடியே யடியேற் கருளுகவே."

"சதுமறை யாகம சாத்திர மெல்லாஞ் சந்தைப் படிப்புநஞ் சொந்தப் படிப்போ, விதுநெறி சுத்தசன் மார்க்கத் திற்சாகா வித்தையைக் கற்றன னுத்தர மெனுமோர், பொதுவளர் திசைநோக்கி வந்தன னென்றும் பொன்றாமை வேண்டிடி லென்றோழி நீதான், அதுவிது வென்னும லாடே டிபந்து வருட்பெருஞ் சோதிகண் டாடே டிபந்து."

"சாதிசம யங்களிலே வீதிபல வகுத்த சாத்திரக்குப் பைகளெல்லாம் பாத்திரமன்றெனவே. ஆதியிலென் னுளத்திருந்தே யறிவித்த படியே அன்பாலின் றுண்மைநிலை யறிவிக்க வறிந்தேன், ஓதியுணர்ந் தோர்புகருஞ் சமரசசன் மார்க்கம் உற்றேன்சிற் சபைகாணப் பெற்றேன்மெய்ப் பொருளாஞ் சோதிநடத் தரசையென்ற னுயிர்க்குயிராம் பதியைச் சுத்தசிவ நிறைவையுள்ளே பெற்று மகிழ்க் தேனே."

சமரச சன்மார்க்க நிலையெய்தி, கடவுள் காட்சி பெற்ற அடியார்களை விடுத்து, அழுக்காறு, அவா, வெகுளிமுதலியன விலகி யொழிதலான், அவைகளின் பயனுய துன்பமென்னும் நச்சு எரிந்து கொண்டிருந்த விடத்தில், இன்பத் தேன் பிலிற்றும். நாளடைவில் அத் தேன் பெருக்கெடுத்தோடும். அப் பெருக்கில் அன்பர்கள் தோய்வார்கள்; ஆடுவார்கள்; பாடுவார்கள். "ஆடுவதும் பாடுவதும் ஆனந்தமாக நின்னைத்-தேடுவது நின்னடியார் செய்கை பராபரமே" என்றார் தாயுமான சுவாமிகள். அவ்வானந்த நிலையை - அதன் மேலீட்டை - அதன் களிப்பை - யான் எம்மொழியால் விளக்க வல்லேன்? சுவாமிகள் மொழிகொண்டு அவ்வானந்தத் தேனை ஈண்டுச் சிறிது பொழிகிறேன். அதனில் மூழ்குங்கள். அதனைப் பருகிப் பருகிக் களிப்புறுங்கள்; ஆடுங்கள்; பாடுங்கள். ஆனந்தம்! ஆனந்தம்!!

"கடல்கடந்தேன் கரை யடைந்தேன் கண்டுகொண்டேன் கோயில் கதவுதிறந்திடப்பெற்றேன் காட்சியெலாங் கண்டேன், அடர்கடந்த திருவமுதுண் டருளொளியாலனைத்தும் அறிந்துதெளிந் தறிவுருவா யழியாமை யடைந்தேன், உடல்குளிர்ந்த னுயிர்கிளர்ந்தே னுள்ளமெலாந் தழைத்தேன் உள்ளபடி யுள்ளபொரு ளுள்ளவனாய் நிறைந்தேன், இடர்தவிர்க்குஞ் சித்தியெலா மென்வசமோங் கினவே இத்தனையும் பொதுநடஞ்செய் யிறைவனருட் செயலே."

"தன்னைவிடத் தலைமையொரு தகவினுமிக் கியலாத் தனித்தலைமைப் பெரும்பதியே தருணதயா நிதியே, பொன்னடியென் சிரத்திருக்கப் புரிந்தபரம் பொருளே புத்தமுதமெனக்களித்த புண்ணியனே நீதான், என்னைவிட மாட்டாய்நா னுன்னைவிட மாட்டேன் இருவருமொன் றாகியிங்கே யிருக்கின்றோ மிதுதான், நின்னருளே யறிந்ததெனிற் செயுஞ்செய்கை யனைத்து நின்செயலோ வென்செயலோ நிகழ்த்திடுக நீயே."

"பண்ணிய பூசை நிறைந்தது சிற்றம் பலநடங்கண், டெண்ணிய வெண்ணம் பலித்தன மெய்யின்ப மெய்தியதோர், தண்ணிய லாமு துண்டனன் கண்டனன் சாமியை நான், நண்ணிய புண்ணிய மென்னுரைக் கேனிந்த நானிலத்தே."

"தூக்கமுந் துயருமச்சமும் மிடருந் தொலைந்தன தொலைந்தன வெனைவிட், டேக்கமும் வினையு மாயையு மிருளு மிரிந்தன வொழிந்தன முழுதும், ஆக்கமு மருளுமறிவு மெய்யன்பு மழிவுறு வுடம்பு மெய்யின்ப, வூக்கமு மெனையே யுற்றன வுலகீ ருண்மையிவ் வாசக முணர்மின்."

"காட்டைக் கடந்தே னூட்டை யடைந்தேன் கவலைதவிர்ந் தேனுவகை மிகுந்தேன், வீட்டைப் புகுந்தேன் தேட்டமு துண்டேன் வேதாகமத்தின் விளைவெலாம் பெற்றேன், ஆட்டைப் புரிந்தே யம்பலத் தோங்குமையர் திருவடிக் கானந்த மாகப், பாட்டைப் படித்தேன் படிக்கின்றேன் மேலும்படிப் பேனெனக்குப் படிப்பித்த வாறே."

"கள்ளத்தை யற்ற வுள்ளத்தைப் பெற்றேன் கன்றிக்களிந்தே மன்றிற் புகுந்தேன், தெள்ளத் தெளிந்த வெள்ளத்தை யுண்டேன் செய்வகை கற்றே னுய்வகை யுற்றேன், அள்ளக் குறையா வள்ளற் பொருளை யம்பலச் சோதியை யெம்பெரு வாழ்வை, பள்ளிக்குட் பாடிப் படிக்கின்றேன் மேலும் படிப்பே னெனக்குப் படிப்பித்த வாறே."

"பனிரண் டாண்டு தொடங்கி யிற்றைப் பகலின் வரையுமே படியிற்பட்ட பாட்டை நினைக்கின் மலையுங் கரையுமே, துணியாதத் தப்பாடு முழுதுஞ் சுகமதாயிற்றே துரையே நின்மெய் யருளிங் கெனக்குச் சொந்தமாயிற்றே."

"ஈராறுண்டு தொடங்கியிற்றைப் பகலின் வரையுமே யெளியேன் பட்ட பாட்டை நினைக்கி லிரும்புங் கரையுமே, ஏராயந் தப்பாடு முழுதுமின்ப மாயிற்றே யிறைவா நின் மெய்யருளிங் கெனக்குச் சொந்தமா யிற்றே."

"காமக்கடலைக் கடந்து வெகுளிக் கடலை நீந்தினேன் கடியமயக்கக் கடலைத் தாண்டி யடியை யேந்தினேன், சேமப் பொதுவினடங்கண் டெனது சிறுமை நீங்கினேன், சிற்றம்பலத்து நடங்கண்டு வந்து மிகவு மோங்கினேன்."

"எண்ணுந்தோறு மெண்ணுந்தோறு மென்னு ளினிக்குதே யிறைவ நின்னைப் பாடநாவி லமுதஞ் சனிக்குதே, கண்ணுங்கருத்து நின்பாலன்றிப் பிறர்பாற் செல்லுமோ கண்டே னுன்னை யினிமே லென்னை மாயை வெல்லுமோ."

"ஈனமறுத்து மெய்ஞ்ஞான விளக்கென் னிதயத்தி லேற்றினீர் வாரீர் உதயச் சுடரினீர்வாரீர்."

"சிவமே பொருளென்று தேற்றி - என்னைச் - சிவவெளிக் கேறுஞ் சிகரத்திலேற்றி, சிவமாக்கிக் கொண்டது பாரீர் - திருச் - சிற்றம்பலத்தே திருநடச் சோதி."

"பொய்யை யொழித்துப் புறப்பட்டேன் மன்றூடும் ஐயரைக் கண்டேனடி - அக்கச்சி ஐயரைக் கண்டேனடி."

"நாதமுடி யானென்றூ தூதுசங்கே ஞான சபை யானென்றூ தூதுசங்கே, பாதமளித் தானென்றூ தூதுசங்கே பதித்தது பூசையென் றூதூதுசங்கே."

"ஆனந்த நாதனென் றூதூதுசங்கே யருளுடை யப்பனென் றூதூதுசங்கே, தானந்த மில்லானென் றூதூதுசங்கே தத்துவச் சோதியென் றூதூதுசங்கே."

"பொய்விட் டகன்றேனென் றூதூது சங்கே புண்ணிய ஞனேனென் றூதூது சங்கே, மெய்தொட்டு நின்றேனென் றூதூது சங்கே மேல்வெளி கண்டேனென் றூதூது சங்கே."

"கொடிகட்டிக் கொண்டோ மென்று சின்னம்பிடி கூத்தாடு கின்றோமென்று சின்னம்பிடி, அடிமுடியைக் கண்டோமென்று சின்னம்பிடி யருளமுத முண்டோமென்று சின்னம்பிடி."

"பொய்யர்க் கரிதா மருந்து - என்னைப் - புறத்து மகத்தும் புணர்ந்த மருந்து கையிற் கிடைத்த மருந்து - சிவ - காமக்கொடியைக் கலந்த மருந்து."

"ஆரணத் தோங்கு மருந்து - அருளாசமாகி யண்ணிக்கு மருந்து, காரணங் காட்டு மருந்து - எல்லாங் கண்டமருந் தென்னுட் கொண்ட மருந்து."

"காலையில் நான்கண்ட சோதி - எல்லாக் - காட்சியும் நான்காணக் காட்டிய சோதி, ஞாலமும் வானுமாஞ் சோதி - என்னுள் - நாணுகித் தாணுகி நண்ணிய சோதி."

"சுத்தசிவ மயச்சோதி - என்னைச் - சோதி மணிமுடி சூட்டிய சோதி, சத்தியமாம் பெருஞ் சோதி - நானே-தானுகி யாளத் தயவு செய் சோதி."

"சிற்சபையும் பொற்சபையும் சொந்தமென தாச்சு தேவர்களு மூவர்களும் பேசுவதென் பேச்சு, இச்சமய வாழ்விலெனக் கென்னையினி யேச்சு என்பிறப்புத் துன்பமெலா மின்றோடே போச்சு."

"சிற்பொதுவும் பொற்பொதுவும் நானறிய லாச்சு சித்தர்களு முத்தர்களும் பேசுவதென் பேச்சு, இப்பெரிய விவ்வுலகிலென்னையினி யேச்சு என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு."

## பாம்பன் - ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அடைவு

### ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் பிரசங்கம்

(ஒரு நிருபர்)

பாம்பன் - ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் 30-5-29 வியாழக்கிழமை காலை 7-15 மணிக்கு முருகன் திருவடி நீழலடைந்தார்கள். சுவாமிகள் இக் கோடை நாளை எப்போதும்போல் பெங்களூரிலிருந்து கழிக்க எண்ண மிருந்தார்கள். புதன்கிழமை காலை புகைவண்டி டிக்கட் பெறப்பட்டது. சுவாமிகள் புதன்கிழமை மாலைவண்டியேறிப் பெங்களூர் செல்ல இருந்தார்கள். புதன் கிழமை மாலை அவருக்கு மயக்கம் உண்டாயிற்று. பரிசோதிக்க வந்த டாக்டரைச் சுவாமிகள் அனுமதிக்கவில்லை. புதன்கிழமை மாலை சுவாமிகளைத் தரிசிக்கச் சென்னைப் புகைவண்டி நிலயத்தில் அன்பர்கள் வந்திருந்தார்கள். சுவாமிகள் குறித்த நேரத்தில் வரவில்லை. அவர்களுக்கென்று பெற்றிருந்த டிக்கட் திருப்பிக் கொடுக்கப்பட்டது. புகைவண்டி நிலயம் போந்த அன்பர்கள் சுவாமிகள் வதிந்து வந்த சென்னை தம்புலையர் தெரு, 39-ம் எண்ணுள்ள நிலயத்தில் சுவாமிகளைக் கண்டார்கள்.

சுவாமிகள் புதன்கிழமை இரவு 2 மணிவரை உரையாடினார்கள். அதன்பின் சுவாமிகள் திருவாய்மொழி கேட்கக் கூடாமற் போயிற்று. சுவாமிகள் உபாதை யொன்றுமின்றி நிட்டை கூடினார்கள். காலை 7.15 மணிக்கு மலர்ந்த முகத்தோடு சுவாமிகள் பொலிந்த வேளையில் ஆவி பிரிந்தது. சுவாமிகள் பிரிவுச் செய்தி துண்டு வெளியீடுகள் மூலமாகவும், தந்தி வாயிலாகவும், பத்திரிகைகள் வாயிலாகவும் நாலா பக்கமும் பரவிற்று. சுவாமிகள் பிரிவுச்செய்தி தெரிந்த மக்கள் கூட்டங்கூட்டமாகத் திரண்டு திரண்டு போந்து சுவாமிகளை வணங்கிச்சென்றார்கள். காலைமுதல் ஜனக்கூட்ட நெருக்கை, சுவாமிகள் வதிந்திருந்த நிலயம் கொள்ளாமையால் வாயிற்படியில் ஒருவரிருந்து கூட்டத்தை அளவுபடுத்தி விட்டுக்கொண்டிருக்க நேர்ந்தது. இரவு 12 மணிவரையும் ஜனத்திரள் பெருகிக் கொண்டே யிருந்தது. இரவு 12மணிக்குச்சுவாமிகள் திருமேனிக்கு அபிடேகம் செய்யத் துவக்கப்பட்டது. காலை 3 மணிக்கு வழிபாடு முடிவுற்றது. 3½ மணிக்குச் சுவாமிகளுக்கென்று வெற்றிலைகளாலும் பூக்களாலும் அலங்கரிக்கப் பெற்றிருந்த விமானத்தில் சுவாமிகள் திரு உடல் அமர்த்தப்பட்டது. ஊர்வலம் செல்ல முடியாமல் தம்புலையர் தெருவை ஜனக் கூட்டம் அடைத்துக் கொண்டது. அங்கு 3-30 மணிக்குப் புறப்பட்ட ஊர்வலம் இராயப்பேட்டை வர 5-30 மணியாயிற்று.

புதுப்பாக்கத்தில் ஸ்ரீ சிவசுப்பிரமணிய சபையாரும் இராயப்பேட்டையில் ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையாரும், பிறரும் சுவாமிகள் திருமேனிக்குப் பூமாலைகள்சூட்டித் தீபாராதனை செய்து வணங்கினார்கள். இங்ஙனே ஊர்வலம் தொடங்கிய இடமுதல் திருவான்மியூர் செல்லும் வரை வழிநெடுக ஆங்காங்குத் தீபாராதனையும் வந்தனை வழிபாடுகளும் செய்யப் பட்டன. ஊர்வலம் 8 மணிக்குத் திருவான்மியூர் சென்றடைந்தது. அங்குச்சுவாமிகளால் பத்து நாட்களுக்கு முன் குறிக்கப்பட்டு விலைக்குஎடுக்கப்பட்டிருந்த 2¼ காணி மணல் நிலப்பரப்பின் ஒரு பகுதியில் கட்டப்பட்டிருந்த சமாதிக் குழியில் மூட்டைக் கணக்கான விபூதியையும், மணங்குக் கணக்கான கற்பூரத்தையும் கொட்டி அதன்மேல் சுவாமிகள் திருமேனி வைக்கப்பட்டது.

### ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

"நவசக்தி" ஆசிரியர் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் சுவாமிகளைப்பற்றிப் பேசியதன் சுருக்கம் வருமாறு:—

சுவாமிகள் திருமுன்பு - சுவாமிகள் தலைமையில்-நான் பன்முறை பேசியிருக்கிறேன். என்றாலும் இன்று சுவாமிகள் திருமுன்



நான் பேச நேர்ந்ததே எனக்குப் பெருமகிழ்ச்சி தருகிறது; அதை நான்பெற்ற ஒரு பெரும் பேறாகவே கருதுகிறேன்.

சுவாமிகளை நான் என் 18-வயது முதல் அறிவேன். என்னைச் சுவாமிகளிடம் அறிமுகப்படுத்தி வைத்தவர்கள் ஆசிரியர் கா. சதிரைவேற் பிள்ளையும் புதுப்பாக்கம் சம்பந்த முதலியாரு மாவர். சுவாமிகளிடம் நான் எனக்கிருந்த பல சாத்திர ஐயங்களைக் களைந்து கொண்டேன். நான் அரசியலில் தலைப்படுமுன்-பத்து ஆண்டுகளுக்கு முன்-என்னுடைய ஓய்வுப் பொழுதைச் சுவாமிகளிடம் அறிவுரையாடுவதிலேயும் எனக்குள்ள சாத்திர ஐயங்களைக் களைந்து கொள்வதிலேயுமே பெரிதுங் கழித்துவந்தேன்.

சுவாமிகள் கலைஞானத்தோடு நின்றவரல்லர்; முருகன் திருவருள் ஞானமும் கைவரப்பெற்றவர். சுவாமிகள் சிற்றங் காரணமாகத் துறவு பூண்டவரல்லர்; வறுமை காரணமாக அக்கோலம் கொண்டவரல்லர். சுவாமிகள் பலநலங்கள் செறிந்த பாம்பனில், உயர்குலத்தில், செல்வத்திற் சிறந்த குடியிற் பிறந் தருளியவர். சுவாமிகள் துறவு பூண்ட போதும் பல்லாயிரக் கணக்கான பொருளுடையவர்களா யிருந்தார்கள். சுவாமிகள் பிறவிப் பயனை அடையவேண்டுமென்னும் ஒரு பெரு நோக்கோடு உண்மையான அகத்துறவுகொண்டவர்கள். சுவாமிகள் பரம்பொருளை அறிந்து அடையவேண்டிச் செய்த பலதிற ஆராய்ச்சி வாயிலாகக் கண்டுதெளிந்து அனுபவித்த உண்மையை உலகினர்க்கு அறிவித்துள்ளார்கள். சுவாமிகள், ஒவ்வொருவரும் தாம் பிறவிப்பிணியை ஒழிக்கவேண்டுமேல் ஒரு தெய்வவழிபாடு செய்ய வேண்டுமென்று அறிவுறுத்துவார்கள். அவ்வொரு தெய்வம் செவ்வாய்க்கோளின் தாக்குதல் அதிகமாகவுள்ள தமிழ் நாட்டினர்க்கு முருகனாகவேயிருத்தல்வேண்டுமென்பதைச் சுவாமிகள் பல சான்றுகளுடன் திறம்பட விளக்கி யிருக்கிறார்கள்.

இதனைச் சுவாமிகள் கலைப்புலமைகொண்டுமட்டும் மொழிந்தார்களில்லை; முருகன் அநுபூதிபெற்றே கூறிப் போந்தார்கள். சுவாமிகள் பொய்ம்மையைப் பகையாகக் கொண்டிருந்தார்கள்; பொய்ம்மையைக் கண்டவிடத்துச் சீற்றங்கொள்வார்கள்; பொய்யர் சேர்க்கை தமக்கிருந்தால் அதனால் வரும் பாவம் தம்மையுஞ் சூழும் என்பார்கள். எனவே, முருகனை வழிபடுவோர் பொய் கடிந்த உள்ளத்தினராதல் வேண்டுமென்பது சுவாமிகளின் அழுத்தமான உபதேசமாயிருந்துவந்தது. அருணகிரி நாதருக்குப் பின்னர் முருகனருட்டிறத்தை உணர்ந்து அநுபவித்து உலகினர்க்கு அதை மொழிந்தவர் நமது பாம்பன் - சுவாமிகளே யாவர். சுவாமிகள் காலத்திலேயே பலர் அருணகிரி நாதரை அறிந்தார்கள்; திருப்புகழ் ஓதினார்கள். முருகன் வழிபாடு யாண்டும் பரவிற்று. இப்பொழுது எங்கணும் அருணகிரிநாதர் திருநாள் கொண்டாடப் படுகிறது.

தாய்மார்களே! அன்பர்களே! சுவாமிகள் தாம் பெறவேண்டிய பேற்றைப் பெற்றார்கள். சுவாமிகள் நம்மை விட்டுப் பிரிந்துவிட்டார்கள் என நீங்கள் யாரும் கவலையுறவேண்டாம். அவர்களது பரு உடல் மறைந்ததேயன்றி அவர்கள் நுண்ணுடல் மறையவில்லை. அவ்வுடல் கொண்டு இப்போதும் அவர் நம்மை யெல்லாம் பார்த்து வருகிறார்; எப்போதும் பார்த்துவருவார். சுவாமிகள் பருவுடலும் ஒரு வழியில் மறையவில்லை. சுவாமிகள் முருகன் மீது கசிந்து கசிந்தருளிப் பாடிய 6666 பாக்கள் நூல் வடிவங்களாக நமக்குக் காட்சியளித்துவரும். இப்போது இங்கு திருநீறுபடர்ந்த சுவாமிகளின் அழகிய திருமேனி, எனக்கு அப்பர் திருவுருவை நினைவூட்டுகிறது. சுவாமிகள் ஒரு வழியில் அப்பருக்கு ஒத்திருக்கிறார்கள். அப்பர் 81-ல் சிவனடி யடைந்தார். நமது சுவாமிகளும் 81-வது வயதில் முருகனடி சேர்ந்தார்கள். சுவாமிகள் அநுபூதி பெற்றவர்களென்பதற்கு இன்று அவர்கள் அடைந்த நாளே நமக்குப் போதிய சான்றாக இருக்கிறது. சஷ்டி திதியில் அவிட்ட நட்சத்திரத்தில் சுவாமிகள் அடைந்திருக்கிறார்கள். இத்திதி அறுமுகன் நோன்புக்குரிய திதியன்றோ? சுவாமிகள் வழிபடு கடவுளாயிருந்தவர் அறுமுகப் பெருமானல்லவோ?

சுவாமிகள் ஆத்மசக்தி இத்திருவான்மியூரை இரண்டாந் திருப்போரூ ராக்கப் போவதை நீங்கள் பார்ப்பீர்கள். சுவாமிகள் இன்னுயிர் பிரிதற்குமுன் "500 ஆண்டுவரை நான் நுண்ணுடல்கொண்டிருப்பேன்" என்று திருவல்லிக்கேணி சோதிடர் சின்னசாமி முதலியார் முன்பும் இராஜாபாதர்முதலியார் முன்பும் சுவாமிகளே கூறியருளியதாகத்தெரிந்துகொண்டிக்க மகிழ்ச்சிகொண்டேன். சுவாமிகள் நுண்ணுடல் கொண்டு நமக்கு வேண்டுவ புரிந்தருளுவார்கள். சுவாமிகள் என்று துறவுபூண்டார்களோ அன்று முதல் பாம்பன் எப்படி யிருக்கிறதெனக் காணவும் விரும்பினார்களில்லை; மனைவி மக்கள் பெண்டுபிள்ளைகளைப்பற்றிக் கருதினார்களில்லை. சுவாமிகளின் உண்மைத் துறவும் ஆத்மசக்தியும் பலரை ஞானப்பிள்ளைகளாகச் செய்திருக்கின்றன; இன்னும் பல ஞானப்பிள்ளைகள் தோன்றுவார்கள். சுவாமிகள் பருவுடல் இன்னுஞ் சில நேரத்தில் மறையப்போகிறது. அப்பருவுடல் சம்பந்தமான மனைவி மக்கள் முதலிய எவரும் இப்போது ஈண்டில்லை. சுவாமிகளின் அருளுபதேசங் கேட்ட நாமே இப்போது சுவாமிகள் பிள்ளைகளாக இங்கிருக்கிறோம். சுவாமிகள் ஆத்ம சக்தியன்றோ சென்னைக்கு 10 மைல் தொலைவிலுள்ள இத் திருவான்மியூரில் இன்று நூற்றுக்கணக்கான தாய்மார்களையும் அன்பர்களையுங் கூடச் செய்திருக்கிறது?

ஆகவே நான் இறுதியாகக் கூறுவதென்னவென்றால் சுவாமிகள் பருவுடல்மறைவு குறித்துநீங்கள்யாரும்கவலையுறவேண்டாம். சுவாமிகள் நுண்ணுடல்கொண்டு எப்போதும் நம்மிடை யிருந்து வருவார்கள். சுவாமிகள் பருவுடலாக உள்ளவை 6666 பாக்களாக உள்ள நூல்கள். அவைகளை யாண்டும் பரவச் செய்யுங்கள். அவைகளிற் கூறியுள்ள உண்மைகளைக் கொண்டுநடக்க உறுதிகொள்ளுங்கள். சுவாமிகள் கைக்கொண்டிருந்த பொய்யாமை எனும் அறவழி நின்றால் சுவாமிகளடைந்த அறுமுகனை நாமுமடையலாம். இப்போது சுவாமிகள் திருவான்மியூரில் எழுந்தருளியிருக்கும் முருகப்பிரான் மீது பாடியருளிய பாக்களை ஓதிச் சாந்தியடையும்படி வேண்டுகிறேன்.

பின்னர், சுவாமிகள் பாடியருளிய திருவான்மியூர்ப் பதிகமும் அடைக்கலப்பத்தும் சுவாமிகள் சீடரான திரு. மா. துரைசாமி முதலியாரால் ஓதப்பட்டன. அதன்பின் சுவாமிகளுக்குத் தீபாராதனை வழிபாடுகள் செய்யப்பட்டன. வந்திருந்த நூற்றுக்கணக்கான தாய்மார்களும் அன்பர்களும் திருநீறு இட்டுச் சுவாமிகள் திருமேனியை மறைத்தார்கள். அதன்பின் சமாதி கட்டடவேலை துவக்கப்பட்டது. நாற்பது நாள்வரை அங்கு மண்டலபூசை நடைபெறும். சின்னசாமி சோதிடர் சமாதியை விட்டுவரவில்லை. அவரே நாற்பது நாள்வரை மண்டல பூசையைச்செய்வார். சுவாமிகளுக்கு அபிடேகாதி வழிபாடுகளையும் அன்பர்கள்சின்னசாமிசோதிடரும் குப்புசாமி செட்டியாரும் இருந்து செய்தார்கள். பெங்களூர், பின்னத்தூர் முதலிய விடங்களிலிருந்தும் வேறு பலவிடங்களிலிருந்தும் அன்பர்கள் வந்து சுவாமிகளைத் தரிசித்தார்கள். சுவாமிகளுக்கு மிக வேண்டிய சீடரான திருவாளர் ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், பி.ஏ., எல்.டி. விழுப்புரத்தினின்றும்வர ரயில்கிடையாதபோனதைக் குறித்து, வருந்தித் தந்தி கொடுத்திருந்தார்கள். வருஞ் சஷ்டியன்று பூசை வழிபாடும், ஏழைகளுக்கு அன்னமளித்தலும், நாற்பதாம் நாள் மண்டல பூசைப் பூர்த்தியிலும் அங்ஙனே வழிபாடு முதலிய சிறப்புக்களும் நடைபெறும்.

### தஞ்சை ஜில்லாவில் காங்கிரஸ் வேலை

தஞ்சை ஜில்லா சம்பந்தப்பட்ட வரையில் ஜனத்தொகை சுமார் 23½ லக்ஷத்திற்கு 400-க்கு ஒருவர் வீதம் சற்றேறக்குறைய காங்கிரசில் வருஷம் 1-க்கு நாலணு சந்தா செலுத்திய அங்கத்தினர் 6000 பேர் வரையில் சேர்க்க சென்ற 24, 25வ களில் பம்பாயில் நடைபெற்ற அகில இந்தியா காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின்படி நாம் கடமைப் பட்டவர்கள் ஆவோம். ஆகையால் தாலூகா காங்கிரஸ் காரியதரிசிகளும் காங்கிரஸ் வாதிகளும் காங்கிரஸ் அபிமானிகளும் தங்களால்இயன்றவரையில் காங்கிரஸ்அங்கத்தினர்கள்சேர்த்து நம் ஜில்லாவின் வீராசாரத்தைப் பூர்த்தி செய்து வைக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன். மகாத்மாஜி கோரியபடி ஆகஸ்டுமீ 31வ வரையில் கெடு கொடுக்கப் பட்டிருந்த போதிலும் இம்மாத இறுதியில் வேதாரண்யத்தில் நடைபெறும்மாகாணமகாநாட்டிற்கு விஜயம் செய்யும் தலைவர்கள் முன்னால் நல்லதொரு அறிக்கையை சமர்ப்பிக்கும்படி விரைவாக அங்கத்தினர் சேர்க்குமாறு வேண்டிக் கொள்கிறேன். அங்கத்தினர் சேர்க்கும் புத்தகம் வேண்டியவர்கள், என்னிடமிருந்தோ தஞ்சை ஸ்ரீமான் வேங்கட கிருஷ்ணபிள்ளை அவர்களிடமிருந்தோ மாகாணக் கமிட்டியிலிருந்தோ பெற்றுக் கொள்ளலாமென்று தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸ்ரீமான் அ. வேதரத்தினம் பிள்ளை தெரிவிக்கிறார்.

பெஷாவரில் 2-6-29ல் நடைபெற்ற காதியானிகள் என்னும் பிரிவினரின் கூட்டமொன்றில், எதிர்க் கட்சியினர் கழுதைகளைத் துரத்தி அவைகளைக் கத்தும்படி செய்து கூட்டத்தைக் கலைத்து விட்டனராம்.

o o o

சென்ற வாரம் பெல்காமில் நடைபெற்ற மகாராஷ்டிர சம்மேளன காட்சிசாலையில் நாகர எழுத்துக்களடங்கிய ஒரு "டைப்ரைட்டர்" வைக்கப்பட்டிருந்தது. அது அண்மையில் ஜெர்மனி தேசத்தினின்றும் திரும்பிய ஸ்ரீமான் ஆத்ரே என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது.

## காங்கிரஸ்காரரும் சட்டசபைகளும்

### காரியக் கமிட்டியின் தீர்மானம்

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் பண்டித மோதிலால் நேரு வெளியிட்டிருக்கும் ஓர் அறிக்கையில் பின் வருமாறு கூறப்பட்டிருக்கிறது:—

இந்தியா சட்டசபை எப்பொழுது கலைக்கப்படும் என்பதைப்பற்றி இராஜப்பிரதிநிதி நிர்ணயமாகத் தெரிவிக்கவில்லை யாதலினால், காங்கிரஸ் காரியக்கமிட்டியார், நிர்க்காலோசனையின் பேரில், சட்டசபை காங்கிரஸ் அங்கத்தினர்கள் பின்கண்ட விதமாக நடந்து கொள்ள வேண்டுமென்று 26 5-29 கூட்டத்தில் தீர்மானித்திருக்கிறார்கள்:—

இந்தியா சட்டசபையையும், மாகாணச் சட்ட சபைகளையும் கலைக்காமல், அவைகளின் காலத்தை நீடித்து வைத்திருப்பதானது, ஸைமன் கமிஷன் அதன் நியமனம் கொள்கை முதலிய வற்றில் வாக்காளர்களுக்குள்ள அதிருப்தியைத் தெரிவிக்கச் சந்தர்ப்பம் கொடாமல் தடுப்பதாக இருப்பதால் காரியக்கமிட்டியார் பின்வருமாறு தீர்மானிக்கின்றனர்:— (1) இந்தியா சட்டசபை அங்கத்தினர்களும், வங்காளம், அஸ்ஸாம் தவிர்த்த மற்ற மாகாணச் சட்டசபை அங்கத்தினர்களும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியாவது, காரியக்கமிட்டியாவது வேறு விதமாகத் தீர்மானிக்கும் வரையில், மேற்படி சபைகளின் கூட்டங்களுக்கோ, அல்லது அவைகளினாலாவது அல்லது அரசாங்கத்தாராலாவது நியமிக்கப் பட்ட கமிட்டிகளுக்கோ செல்லாமல் இருக்கவேண்டும். (2) சட்டசபை காங்கிரஸ் அங்கத்தினர்கள் தங்களுக்குக் கிடைக்கும் எல்லாக்காலத்தையும் இனிக் காங்கிரஸ் திட்டங்களை நிறைவேற்றும் வழியிலேயே செலவழிக்கவேண்டும்.

வங்காள அஸ்ஸாம் சட்டசபை அங்கத்தினர்கள் மாத்திரம் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொள்ள ஒரே முறை சட்டசபைக் கூட்டத்திற்குச்செல்லலாம்.

### நிர்மாண வேலையின் இன்றியமையாமை

#### பண்டித மோதிலால் நேருவின் சுற்றுக் கடிதம்

இந்தியா சட்டசபை, இராஜாங்க சபை, மாகாண சட்டசபைகள் இவைகளின் அங்கத்தினர்களுக்குப் பண்டித மோதிலால் நேரு பின்வரும் சுற்றுக் கடிதத்தை அனுப்பியிருக்கிறார்:—

சட்டசபைகளின் காலத்தை நீடித்து வைப்பதன் சம்பந்தமாக கவர்னர் ஜெனரலும் மாகாண கவர்னர்களும் வெளியிட்ட அறிக்கைகளை நீங்கள் படித்திருப்பீர்கள். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் காரியக் கமிட்டியும் இந்நிலைமையைப் பற்றி ஆலோசனை செய்து, சட்டசபைகளிலுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள், மறு அறிக்கை பிறப்பிக்கப் படும்வரையில் சட்டசபைக் கூட்டங்களுக்குச் செல்லக்கூடாதென்று தீர்மானித்தன. தவிர, தங்களுக்குள்ள எஞ்சிய நேரத்தை தேசத்தில் காங்கிரஸ் வேலைக்கே செலவழிக்க வேண்டும் என்று கூறப்பட்டார்கள். தேசத்தின் முக்கிய பலமானது சட்டசபைகளுக்கு வெளியில் செய்யப்படும் வேலையைப் பொறுத்தே இருக்கிறது. நாம் சட்டசபைகளில் செய்யும் வேலையின் மதிப்பு நமக்குத் தேசத்திலிருக்கும் பலத்தை ஒட்டியே இருக்கிறது. இப்பொழுதிருக்கும் நிலைமையைப் பார்த்தால் சமீபத்தில் ஒரு நெருக்கடி ஏற்படுமென்பது நிச்சயம். குறைந்த பட்சம் இந்த வருஷத்தின் இறுதியில் இந்த நெருக்கடியை நாம் நம்பிக்கையுடன் சமாளிக்கத் தயாராகஇருக்க வேண்டும். இதனாலேயே அகிலஇந்தியகாங்கிரஸ்கமிட்டி அடுத்த மூன்றுமாதத்தில் செய்ய வேண்டிய வேலையைத்திட்டப்படுத்தி யிருக்கிறது. எந்தக் கமிட்டி இத்திட்டத்தின்படி நடக்கவில்லையோ அது காங்கிரசினின்றும் பிரிக்கப்பட்டு விடும். காங்கிரசின் சார்பாக இந்தியா சட்டசபையிலும், மாகாண சட்டசபைகளிலும் அங்கத்தினர்களா யிருப்போர் சட்டசபைகளுக்குள் வேலை செய்யத் திறமை இருப்பதுபோல் வெளியிலும் வேலைசெய்யத் திறமை உண்டு என்பதை நிரூபிக்க வேண்டும். இனிக் கூடப்போகும் சட்டசபைகளில், நாம் செய்ய வேண்டிய வேலையை உத்தேசித்தாவது நமது தேர்தல் தொகுதிகளில் சென்று காங்கிரஸை பலப்படுத்த வேலை செய்ய வேண்டும். காங்கிரஸ் திட்டத்தைப் பூரணமாக அமுலுக்குக் கொண்டு வர உங்களுடைய காலத்தையும் உழைப்பையும் செலவழிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்வதற்காகவே இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். உங்களுடைய தேர்தல் தொகுதியிலேயே இந்த வேலைத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர நீங்கள் விரும்புவது சகஜம் தான். அது சரியே ஆயினும் உங்களுடைய மாகாண காங்கிரஸ் கமிட்டியுடன் நீங்கள் உடனே சம்பந்தம்வைத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அப்பொழுது உங்களுடைய காலமும் முயற்சியும் பிறருடைய காலத்தோடும் முயற்சியோடும் ஒன்றுபட்டு நல்ல பலனையளிக்கும்.

#### விசேஷ கவனம் வேண்டும்

காங்கிரஸ்திட்டங்களிலேதேனுமொன்றின் சம்பந்தமாக நீங்கள் உங்களுடைய கவனத்தைச் செலுத்தலாம். கிராமங்கள் தோறும் காங்கிரஸ் கமிட்டிகளை ஏற்படுத்துதல், காங்கிரசிற்கு அங்கத்தினர்களையும், தொண்டர்களையும் சேர்த்தல், அந்நியத்துணிகளைப் பகிஷ்காரம் செய்தல் ஆகிய இவ்விஷயங்களிலேயே உங்கள் கவனத்தை விசேஷமாகச் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். காங்கிரசிற்கு நிதிதிரட்டும் விஷயத்திலும் உங்கள் கவனத்தைச் செலுத்த வேண்டுகிறேன். இங்ஙனம் சேரும் பணத்தை அந்தந்த மாகாண காங்கிரஸ் கமிட்டிகளுக்குக் கொடுத்தால் அவை நன்கொடை யாளர்களுக்கு ரசீது அனுப்பும். பணத்தை அலகாபாத்திலுள்ள அகில இந்திய காங்கிரஸ்கமிட்டி காரியாலயத்திற்கு நேரேயும் அனுப்பலாம். சட்டசபை காங்கிரஸ் அங்கத்தினர்கள் செய்யும் வேலை விபரங்கள் அடங்கிய தஸ்தாவேஜி இருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். ஏனென்றால், அப்பொழுதே சட்டசபைகளுக்கு வெளியே நாம் எத்தகைய வேலை செய்ய முடியும் என்பதைக் காட்ட முடியும். ஆதலின் காங்கிரஸ் திட்டத்தை நிறைவேற்றும் விஷயத்தில் நீங்கள் என்னென்ன வேலை செய்தீர்கள் என்பதைப்பற்றி மாதந்தோறும் ஓர் அறிக்கை எனக்கு அனுப்பிக் கொண்டு வரவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். தனியான ஒரு காகிதத்தில் இதை அனுப்பினால் நல்லது. அதை நேரே எனக்கே அனுப்ப வேண்டும். இது சம்பந்தமாக உங்களுக்கு ஏதேனும் கஷ்டம் தோன்றும்பொழுது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு எழுதினால் அது உங்கள் கஷ்டங்களை நீக்க முயலும்.

### தமிழ் நாட்டில் வேலை

#### ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச ஐயங்கார் அவர்களின் வேண்டுகோள்

தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச அய்யங்கார் பின் கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்:—

தமிழ்நாட்டிலுள்ள எல்லா காங்கிரஸ் அமைப்புகளும் எல்லா காங்கிரஸ்காரர்களும் பம்பாயில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானத்தின்படி காங்கிரசிற்கு அங்கத்தினர்களைச் சேர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்தத் தீர்மானப்படி தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில் ஐம்பத்திரண்டாயிரம் அங்கத்தினர்கள் சேர்க்கவேண்டும். இங்ஙனம் அங்கத்தினர்கள் மூலமாக வசூலிக்கப்பட்ட பணத்தில் மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு அனுப்பிய தொகைபோக மிகுதிப் பணம் ஒவ்வொரு ஜில்லாவுக்கும் பகிர்ந்து கொடுக்கப்படும். மூன்று மாதத்திற்குள் இந்த மறு அமைப்புத் திட்டம் நிறைவேற்றப்படாவிடில் மாகாண, ஜில்லா ஸ்தாபனங்கள் காங்கிரசினின்று விலக்கப்பட்டு விடும். முதல் முறையாக சுயராஜ்ய ஸ்தாபனத்தை ஏற்படுத்துகிறோம் என்ற நிர்ணயபுத்தியுடன் இந்த காங்கிரஸ் ஸ்தாபனங்களைத் திருத்தி அமைக்க வேண்டும். சட்டசபை, ஸ்தல ஸ்தாபனங்கள் இவைகளின் வாக்காளர்களைக் காங்கிரஸ் அங்கத்தினர்களாகச் சேர்க்க முயலவேண்டும். லாகூர் காங்கிரசில் செத்தை உடையவர்கள் தங்கள் பூரா கவனத்தையும் இவ்விஷயத்தில் செலுத்த வேண்டும்.

ஐரோப்பா கண்டத்திலுள்ள, பல உயர் நிலைமாடங்கள் அநேக வருஷங்களுக்கு முன் கட்டப்பட்டதால் இப்பொழுது, மேலேயுள்ள சில மாடிகள் சரிந்திருக்கின்றன. இவைகளை நோக்க, பல இஞ்சினீர்கள், அஸ்திவாரத்தைப் பழுது பார்க்கப் போகிறார்களாம்.

கோவா கவர்னர் ஜெனரலாயிருந்த ஜெனரல் மாஸாஞ டெமாரின் கெடுநாளாய் சுகவீனமாயிருந்து 30-5-29ல் மரணமடைந்தார்.

o o o

சென்னைக்கவர்னர் லார்ட் கோஷன் பிரபு உதக மண்டலத்திலிருந்து 25-6-29ல் புறப்படுவார். அவர் 29-6-29ல் இராஜப் பிரதிநிதி பதவியை வகிப்பார்.

o o o

சீனத் தலைவரான ஸன்யாட்ஸென் என்பாருக்குப் பத்துலட்சம் பவுன் செலவில் ஒரு சமாதி அமைக்கப்பெற்று அதில் அவரது சவம் அடக்கஞ் செய்யப்பட்டது.

o o o

இராஜபால் கொலை வழக்கில் தூக்குத் தண்டனை யடைந்த இலாம்தீன் ஹைக்கோர்ட்டில் அப்பீல் செய்திருக்கிறார். இவ்வழக்கு ஜூலை மாதத்தில் விசாரணைக்கு வரும்.

o o o

சென்ற வாரம், விழுப்புரத்தைச் சேர்ந்த திரு. டேவிஸ் என்பார், ரயில் இன்ஜினில் வேலை செய்து கொண்டிருந்தபோது, சூரிய வெப்பம் தாங்க முடியாமல் கீழே விழுந்து மரணமடைந்தார்.

o o o

மங்களூர், அரசாங்க தலைமை வைத்திய சாலையின் உபயோகத்திற்கென ரூ 1600க்குக் கதர் வாங்கப்பட்டுள்ளது. இவ்வைத்திய சாலையில் கதர் உபயோகப்படுத்தியது இதுவே முதன் முறையாகும்.

o o o

லாகூரிலுள்ள மசூதியொன்றில் பழைய குற்றவாளியான அப்துல்லா என்பார் ஒரு ஜதை செருப்புத் திருடியதற்காக முதல் வகுப்பு மாஜிஸ்திரேட், அவருக்கு இரண்டாண்டு கடுங்காவல் தண்டனை விதித்தார்.

o o o

"இந்துஸ்தான் பாங்க் லிமிடெட்" என்னும் பெயர் வாய்ந்த ஒரு புதிய பாங்க் சென்னையில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்தியன் பாங்க் காரியதரிசியாயிருந்த ஸ்ரீமான் வித்தியாசாகர பாண்டியா இதன் நிருவாக டைரக்டராவர்.

o o o

பதினெட்டு வயதுக்குட்பட்ட மாணவர்கள் கலியாணம் செய்து கொண்டால், அவர்களை எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் சேர்க்காமலிருக்க ஒரு சட்டம் உண்டாக்க வேண்டுமென்னும் விஷயமாக பஞ்சாப் அரசாங்கத்தார் யோசனைசெய்து வருகின்றனர்.

o o o

தஞ்சாவூர் சிசுக்கொலை வழக்கில் தீவாந்திர சிட்சை யடைந்த ஸ்ரீமதி கஜாம்பாளின் தண்டனையை அரசாங்கத்தார் ஓராண்டு சிறை வாசமாக குறைத்து விட்டார்கள். எனவே இம்மாது வேலூர் சிறையில் மிகுதி காலத்தைக் கழிக்கும்படி உத்தரவாயிருக்கிறது.

o o o

பாளையங்கோட்டை, ராமசாமி கோயிலருகிலுள்ள ஒரு விநாயகர் கோயிலுக்குள் சில திருடர்கள் புகுந்து, விநாயகருக்குத் தரித்திருந்த தங்க பூணூலையும் ஏனைய விலையுயர்ந்த சாமான்களையும் களவாடிச் சென்றார்களாம். விநாயகருக்கு வேறு உபயனம் செய்ய ஏற்பாடு நடந்து வருகிறது.

o o o

காலஞ்சென்ற சர்மசமது ரபீக் வகித்திருந்தஸ்தானத்தில் கர்னல் நவாப்சர் உமார் ஹயத்கான், கே. ஸி. ஐ. இ. அவர்களும் ஸ்ரீமான் சுரேந்திர நாத் மல்லிக் ஸி. ஐ. ஈ. அவர்களுக்குப் பதிலாக சர் வசந்த குமார் மல்லிக் அவர்களும் இந்தியா மந்திரி சபை அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

o o o

திருநெல்வேலி ஜில்லா, சங்கரன்கோவில் தாலுக்காவிலுள்ள சிந்தாமணியிலும், பக்கத்துக் கிராமங்களிலுமுள்ள ஹிந்து நாடார்கள் விசாகத்தன்று சுப்பிரமணியர் ஆலயத்துக்குள் பிரவேசிக்க முயன்றார்கள். ஆலய அதிகாரிகள் வேண்டுகோளின்மீது போலீஸார் அவர்களைச் சமாதான முறையில் தடுத்து விட்டனர்.

o o o

அண்மையில் அலகாபாத்தில் ரயிலிலிருந்த ஒரு 'டிரங்கு' பெட்டியில் தலையின்றி வெறு முண்டம் மட்டும் காணப்பட்டது. இதன் சம்பந்தமாக 4 வங்காளிகளை ஐயத்துடன் போலீஸார் கைது செய்திருக்கின்றனர். மரணமடைந்தவர் மூக்குக்கண்ணாடி வியாபாரியான அப்துல் கப்பூர் என்று தெரிய வருகிறது.

o o o

சென்னை, இராயப்பேட்டை, முத்து முதலி வீதி, 27-ம் நெ. (மேல்மாடி) கிருஹத்திலுள்ள வேதப்ரவசன மந்திரத்தில், 'திருஞானசம்பந்தர் தேவாரம்' என்னும் விஷயமாக 6-6-29 வியாழக்கிழமை ஸ்ரீ சிவத்யாநாநந்த மஹரிஷி ஓர் ஆராய்ச்சியுரை நிகழ்த்துவார்கள் என்று நமக்கு அறிவிக்கப் படுகிறது.

# கலம்பகம்

கும்பகோணத்தைச் சேர்ந்த உப்பிலியப்பன் கோவிலில் 31-5-29ல் நடைபெற வேண்டிய ஒரு திருமணம் கடைசி சமயத்தில் நின்று விட்டது. திருமணத்திற்குரிய எல்லாச் சடங்குகளையும் செய்த பின்னர் தாலிகட்டுஞ் சமயத்தில் மணமகள், மணமகன் குஷ்டரோகி யெனத் தெரிந்து மண மேடையைவிட்டு எழுந்து ஓடிவிட்டாள்.

o o o

டாக்டர் ரவீந்தரநாத் தாகூர் "எடுகேஷனல்" புத்தகசாலைமீது கொண்டுவந்த வழக்கின் விவரம் முன்னர் குறிப்பிட்டுள்ளோம். அவ்வழக்கில் வாதி, ரவீந்திருக்கு ரூ. 400 நஷ்டஈடு கொடுக்கவேண்டுமென்றும், இனி டாக்டர் தாகூரின் புத்தகங்களை அச்சிடவோ, விற்கவோ கூடாதென்றும் அலகாபாத் ஹைகோர்டில் தீர்ப்பளிக்கப்பட்டது.

o o o

சிம்லாவில், பேர்பெற்ற பாரிஸ்டரும், அரசாங்க ரிசீவருமாயிருந்த ஸ்ரீமான் நாதுராம் என்பார் 1-6-29 காலை துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு மரணமடைந்தார். அவர், தம்மிடமிருந்த அரசாங்க பணமாகிய 12,000 ரூபாவைச் சேர்ப்பிக்க வேண்டிய இடத்தில் சேர்ப்பிக்காமல் செலவழித்து விட்டதே இதற்குக் காரணம் என்று தெரிகிறது.

o o o

மேல்சிந்து பிரதேசத்தில் பிரஜோகாத் என்னுமிடத்தில் நடந்த சண்டையில், செருப்புத் தைக்கும் முஸ்லீம் ஒருவர் இரு பொற் கொல்லர்களைக் கொலை செய்து விட்டார். போலீஸார் அவரைக் கைது செய்ய வந்தனர். அப்போது அந்த முஸ்லீம், போலீஸாரை எதிர்த்ததால், போலீஸார் அவரைச் சுட்டு வீழ்த்தியதாகக் கூறப்படுகிறது.

o o o

கல்கத்தா பர்ரா கடைத்தெரு சாலையில் ஒரு வியாபாரி ரூ. 13,000 பெறுமான நகைகளைப் பறி கொடுத்தார். மினர்வா மோட்டார் காரில் போந்த ஒரு கனவான் அந்த நகைகளை வாங்கி ஒரு பெட்டியில் வைத்து முத்திரையிட்டு மறைத்து வைத்துக்கொண்டார். அவர் உருளைக்கிழங்குகளுடைய அதே மாதிரியான பெட்டியொன்றை அதற்குப் பதிலாக வைத்துவிட்டுச் சென்றார்.

o o o

நவலூற்றுச் சமரச சன்மார்க்க சங்கம் இரண்டாம் ஆண்டு பத்தாந் திங்கட்கூட்டம் (9—6—29) ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு கன்னிச்சமீன் சன்னைய சவுண்டன் பட்டியைச் சேர்ந்த பாறைப்பட்டி மாரியம்மன் கோயிலின் திருமுன், சங்கத்தின் நிலைய குரு ஸி. சுவாமி சிவகேசம் அவர்கள் தலைமையின் கீழ் பேரறிஞர் சிலர் சொற்பொழிவுகள் நிகழ்த்துவர் என்று அறிவிக்கப்படுகிறது.

o o o

சென்னையில், திரு. காலட் என்னும் ஐரோப்பியர் தமது மோட்டாரை வேகமாகச் செலுத்தியதால் ஒருவர் மரணமடைந்ததும், சிலர்காயமுற்றதும், அதன் சம்பந்தமாக ஹைகோர்ட்டில் நடைபெற்றவழக்கில் நீதிபதிகள் பிரதம மாகாண மாஜிஸ்திரேட் தீர்ப்பைக் கண்டித்ததும் நேயர்கள் அறிந்ததே. அதற்குப் பிரதமமாஜிஸ்திரேட் அனுப்பிய பதில்களை அரசாங்கத்தார் ஹைகோர்ட்டுக்கு அனுப்பி யிருக்கின்றனர். மூன்று நீதிபதிகளடங்கிய ஒரு குழு இதைக் கவனித்து முடிவு கூறும்.

o o o

நிகழும் வைகாசித் திங்கள் பத்தாம் நாள் பௌர்ணமியன்று நாகர்கோவில் திரு. சொக்கலிங்கம் பிள்ளை அவர்களுடைய "தேசபந்து காட்டேஜ்" என்னும் அழகிய இல்லின்கண், கிருஷ்ணன் கோவில் திரு. சுந்தரக்கம்பர் அவர்களது சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. திரு. கம்பர் அவர்களுக்கு குருதக்ஷிணையாக திரு. சுப்பிரமணிய ஆசாரியவர்களால் ரூ. 200 பெறுமான ஒரு ஜோடி வயிரக் கடுக்கன் திரு. என். மகாராஜ பிள்ளை அவர்கள் வாயிலாக ஓர் அழகிய சிறு சொற்பொழிவுடன் கொடுக்கப் பட்டது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

பம்பாயில், மிஸ்ரூபி ரோஜர்ஸ் என்னும் 18-வயதுள்ள ஐரோப்பிய மாது அஜாக்கிரதையாக தமது மோட்டாரை ஓட்டி ஒரு மாதை மரணமடையச் செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு நடைபெற்ற வழக்கில், மூன்றாவது மாகாண மாஜிஸ்டிரேட், அவருக்கு ஒருநாள் வெறுங்காவல் தண்டனைகொடுத்தார். இந்தத் தீர்ப்பைச் செவியுற்ற அம்மாது "ஐயோ! சிறை வேண்டாம். நான் சிறைக்குப் போகக் கூடாது. நான் சிறைக்குப் போகக் கூடாது." என்று கதறினாள். பிறகு மாஜிஸ்டிரேட் தண்டனையை ரூ. 400 அபராதமாக மாற்றினார்.

o o o

ஆறுமுகனேரி சைவசித்தாந்த சங்கத்தின் இருபத்தோராம் ஆண்டு நிறைவு விழா எல்லாம் வல்ல முருகப் பெருமான் திருவருட்டுணையால் நிகழும் மெய்கண்டான் ஆண்டு 706, சுக்கிலஸு வைகாசித் திங்கள் 27,28-ஆம் (1919 ஜூன்மீ 9,10-ஆம்) நாட்களில் இங்கர் விநாயகர் கோவில் தெருவில் சங்க நிலயத்திற்கு முன்பாக அமைக்கப் பெறும் பந்தலின் கண் நடைபெறுவதாகும். அவ்வமயம், தாகூர் சட்ட விரிவுரையாளரும், சென்னை ஹைகோர்ட்டு அட்வகேட்டுமான திருநெல்வேலி உயர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள் எம். ஏ., எம். எல்., அவைத் தலைமை வகிப்பார்கள் பல அறிஞர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள் என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

o o o

வீரசைவ இளைஞர்சங்கம் ஸ்ரீவில்லிபுத்தூர்:—சுக்கில வருடம் வைகாசித் திங்கள் 16-ம் நாள் (29 5-29) மாலை 4-மணிக்கு திருவாளர் வீ. சேதுராமலிங்கமவர்கள் பி. ஏ. தலைமையின் கீழ் வீரசைவ இளைஞர் கூட்டம் கூடப்பட்டது. அச்சமயம் சங்கத்தின் நிருவாக உத்தியோகஸ்தர்கள் தெரிந்தெடுக்கப் பட்டார்கள் என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

o o o

சென்னை சைமன் கமிட்டி:—மாகாண சுய ஆட்சி அளிக்க வேண்டு மென்றும், சட்ட சமாதான இலாகா உள்பட சகல இலாகாக்களையும் மந்திரிமார்களிடம் மாற்றிவிட வேண்டு மென்றும், இராணுவம், தேசக்காப்பு, அந்நிய நாட்டு சம்பந்தம் முதலியன தவிர்த்து, ஏனைய விஷயங்களின் பொறுப்பை இந்திய அரசாங்கத்தாரிடம் விட்டுவிட வேண்டுமென்றும், இராணுவத்தைப் படிப்படியாக இந்தியர் மயமாக்க வேண்டுமென்றும் இன்னும் சில விஷயங்களையும் ஒற்றுமையுடன் சிபார்சு செய்திருக்கிறது.

o o o

காஞ்சியில் ஆதித்திராவிடர்கள் தேர் இழுத்த காட்சி:—காஞ்சீபுரம் ஸ்ரீ வரதராஜ சுவாமிக்கு 27 5-29-ல் நடைபெற்ற ரத உற்சவத்தின் போது நடுவழியில், வழக்கமாக தேர் இழுப்பவர்கள் திடீரென்று தேர் இழுக்க மறுத்து விட்டார்கள், காரணம் அவர்கள் அதுவரை இழுத்ததற்குக் கொடுக்க வேண்டிய சம்பளம் கொடுக்கப்படாததே. இரண்டு நாட்களாய் தேர் நிலைக்கு வராமல் நடுவழியிலேயே தங்கி. விட்டது. கடைசியில் சுற்றுப் பக்கங்களிலுள்ள ஆதித்திராவிடர்களைக் கொண்டு தேர் இழுக்கத் தீர்மானிக்கப்பட்டது. அவ்வண்ணமே ஆதித்திராவிடர்கள் உதவியினால் தேர் நிலைக்குக் கொண்டுவந்து சேர்க்கப்பட்டது. ஆதித்திராவிடர்கள் கௌரவ முறையில் இழுக்க அநுமதிக்கப்பட்டது இதுவே முதன் முறையாம். பிராமணர்களும், ஜாதி ஹிந்துக்களும், ஆதித்திராவிடர்களும் ஒன்று சேர்ந்து தேரை இழுத்தது பேரானந்த காட்சியாக விருந்தது என்று ஒரு தினசரிப் பத்திரிகை நிருபர் கூறுகிறார்.

o o o

மாஜி போலீஸ் இன்ஸ்பெக்டருக்குத் தண்டனை:—மாஜி போலீஸ் இன்ஸ்பெக்டரான பி. சே. ரங்காராஜு அர்ஸ் என்பவர் 15-9-28-ல் சென்னை அடிசன் கம்பெனியில், 'ராயல் டைப்ரைட்டர்' ஒன்றை முதலில் ரூ. 20 கட்டி, மிகுதி பணத்தை 17 மாதத்திற்கு மாதந்தோறும் ரூ. 20 விகிதம் கட்ட வேண்டுமென்னும் கூலிணை நிபந்தனையின்பேரில் வாங்கினர். முரளிதாஸ் விஷ்ணுதாஸ் என்பார் அதற்கு உத்தரவாதியாகக் கையொப்ப மிட்டார். இவ்விருவரும் 16-9-28-ல் அவ்வியந்திரத்தை அமர்சந்த் என்னும் மார்வாரியிடம் அடகு வைத்து ரூ. 105 பெற்றுக் கொண்டனர். முதல் குற்றவாளி அவ்வியந்திரத்தை ரூ. 200-க்கு விற்கவும் முயன்றார். பலமாதங்களாக, கம்பெனிக்குச் சேரவேண்டிய தவணை பணத்தைச் செலுத்தாதனால், அடிஸன் கம்பெனியார் எதிரிகளின் மீது நம்பிக்கை மோசம் செய்ததாக வழக்குத் தொடுத்தார்கள். 1-6-29-ல் இவ்வழக்கை விசாரித்த பிரதம மாகாண மாஜிஸ்திரேட் எதிரிகள் குற்றவாளிகளெனக் கூறி, அவ்விருவரையும் ரூ. 500 சொந்த ஜாமீனிலும், ரூ 500 நபர் ஜாமீனிலும் விடுதலை செய்து, இரண்டு ஆண்டுக்கு அவர்கள் நன்னடக்கையுடனிருப்பதாக எழுதிக்கொடுக்க வேண்டுமென்றும், "டைப்ரைட்டர்", கம்பெனிக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்றும் உத்தரவிட்டார்.

## அறந்தாங்கி தாலூகா முதலாவது காங்கிரஸ் மகாநாடு

### ஜூன்மீ 8, 9-ந் தேதிகளில் நடைபெறும்

மகாநாட்டின் சம்பந்தமான எல்லா வேலைகளும் அநேகமாக முடிவு பெற்று வருகின்றன. கொட்டகை வேலை அநேகமாக முடிவடைந்து விட்டது. கொட்டகையானது நகரின் எந்தப் பாகமிருந்து பார்த்தாலும் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து பார்த்தாலும் மகாமேரு போல் விளங்கிக் கொண்டிருக்கிறது. மிகவும் நெருக்கடியான சமயத்தில் மகாநாடு கூடுகின்றதாயினும் அவைகளை யெல்லாம் சமாளித்துக் கொள்ளக் கூடிய தலைவர்களே மகாநாட்டை நிர்வகிக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

### வரவேற்புக் கழகம்

அடியிற் கண்ட நிருவாகிகளைக் கொண்ட ஒரு வரவேற்புக் கழகம் ஏற்படுத்தப் பெற்றிருக்கிறது:—

1. ஸ்ரீமான்கள் ஆ. ஏகாம்பரம் சேர்வைகாரர் அவர்கள் மிராசுதார், நெற்குப்பம்: உபசாரணைக் கமிட்டித் தலைவர் 2. ஆ. பள. நா. வயி. நாடிமுத்து பிள்ளை அவர்கள், முக்கிய உறுப்பினர், மிராசுதார் & பாங்கர் பட்டுக்கோட்டை. 3. வீ ராமசாமி நாயுடு அவர்கள் அறந்தாங்கி, (யூனியன் போர்டு தலைவர்) காரியதரிசி. 4. எ. சா. உ. ஸி. வீர. சின்னய்யா பிள்ளை (மளிகை அறந்தாங்கி) பொதுக் காரியதரிசி. 5. கோ. இராஜகோபால நாயகர் அவர்கள், கூட்டுக் காரியதரிசி.

### பிரதிநிதிகள்

வரும்போது படுக்கைகள் முதலியன கொண்டு வரவேண்டும். வரவேற்பு அங்கத்தினர் கட்டணம் ரூ. 5—0—0. பிரதிநிதிக் கட்டணம் ரூ. 1. பார்வையாளர் கட்டணம் ரூ. 0—8—0 வைக்கப் பெற்றிருக்கிறது. சாப்பாடு வசதிகளும் இடவசதிகளும் செய்யப்பட்டிருக்கின்றன. மற்றும் மகாநாடு சம்பந்தமான முறைகளில் எல்லா ஒழுங்குகளும் முக்கியமாய் கவனிக்கப்பட்டு வருகின்றன. அனைவர் வரவையும் எதிர்பார்க்கிறோம் என்று விளம்பரக் காரியதரிசி எழுதுகிறார்.

## ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் தேகநிலை

திருப்பாதிரிப்புலியூரில் நம், குரு மஹா சன்னிதானம் சைவப் பெரியார் மஹா நாட்டிற்குத் தொண்டாற்றியபின் ஏற்கெனவே இடது பக்கம் முதுகில் இருந்த சிறுகட்டி அதிக உழைப்பின் அதிர்ச்சியால் கொஞ்சம் பருமனாகி வலிதோன்றியது. டாக்டர் பலரும் பார்த்து ஆப்ரேஷன் செய்ய வேண்டுமென்று தெரிவித்தார்கள். திருக்கோவலூர் யூனியன் சேர்மென். நெ. சு. பொன்னுசாமிப்பிள்ளை அவர்கள் ஷியூர் டேனிஷ் மிஷன் ஆஸ்பத்திரியிலிருந்து ஸ்ரீமான் டாக்டர் ஜான் அவர்களைக் கொண்டு பார்த்ததில் இராஜ பிளவைதானென்றும் விரைவில் ஆப்ரேஷன் செய்துவிடவேண்டுமென்றும் தெரிவித்ததின் மேல் சென்ற வெள்ளிக்கிழமை மாலை ஆப்ரேஷன் செய்யப்பெற்றது. திருப்திகரமாகவும் குணமாகவுமிருந்து வருகிறது. பிறகு திவான்பஹதூர் தரும பூஷணம் முத்தையா செட்டியார் அவர்கள் கேள்வியுற்றுத் தாம் அவசியமாக ஊருக்குச் செல்லவேண்டிய பிரயாணத்தை நிறுத்திக்கொண்டு ஸ்ரீமத் குரு மஹா சன்னிதானத்தின் சுகத்தை உத்தேசித்து ஆலயத்தில் ஆண்டவனுக்கும் அம்பாளுக்கும் ஸ்ரீ குருமஹா சன்னிதானம் சரீர சௌக்கியமாகும் வரையில் அபிஷேகம், ஆராதனை அர்ச்சனை தீபம் முதலியவைகள் தனித்திட்டத்தில் போடச்செய்து பிரார்த்தனை நடத்தி வருகிறார்கள். தவிர ஒவ்வொரு நாளும் இரண்டு வேளைகளிலேயும் வந்து நிறைந்த அன்போடுகூடிய இனிய மொழிகளால் ஆறுதலளித்து வருதலானது மிகவும் பாராட்டத் தக்கதே. சனி, ஞாயிறு இரண்டு தினங்களிலேயும் டெம்பிரேச்சர், 99 98டிக்கிரிகள் இருக்கின்றன சுகமான நிலையிலிருந்து வருவதாக டாக்டர்கள் கூறுகிறார்கள் என்று ஞானியார் ஆசிரமத்து அமைச்சர் திருவாளர் பி. எஸ். வடிவேற் செட்டியார் தெரிவிக்கிறார்.

---

சஹாரா பாலைவனத்தைக் குறுக்கே கடந்து செல்ல பிரஞ்சு அரசாங்கத்தார் ஒரு ரெயில் பாதையைப்போட உத்தேசித்திருக்கின்றனர். மேற்படி பாலை வனத்தில் அடிக்கடி அடிக்கும் மணல்காற்றினால் சேதம் விளையா திருக்குமாறு, பெரிய எஃகுக் குழாய்களுக்குள்ளே ரெயில் பாதையைப் போட உத்தேசித்திருக்கிறார்களாம்.



# உலகக் காட்சி

### இங்கிலாந்தில் சில குருட்டு நம்பிக்கைகள்

இந்தியாவிலேயே, பலவிதமான குருட்டு நம்பிக்கைகள் அநுஷ்டானத்தில் இருந்து வருகின்றன வென்று மேனாட்டார் பலர் எழுதியும் பேசியும் வருகின்றனர். ஆனால் இங்கிலாந்தில் இன்னும் பலவிதமான குருட்டு நம்பிக்கைகள் இருந்து வருகின்றன. சில உதாரணங்களைக் கீழே தருகிறோம்.

வெள்ளிக் கிழமை வைத்தியரை அழைத்து வைத்தியம் செய்து கொண்டால், நோய் குணமடையாது.

ஏணியின்கீழ்செல்வது துரதிர்ஷ்டமாகும்

மேஜையின்மீது மூன்று மெழுகுவர்த்திகள் இருந்தால் அது துரதிருஷ்டத்திற்கு அறிகுறியாகும்.

உப்பைக் கீழே கொட்டக் கூடாது.

வெள்ளிக்கிழமை யன்று, நகத்தைக் கத்தரித்துக் கொள்ளுதல் பெரிய ஆபத்தைத் தருவித்துக் கொள்வதாகும்.

வீட்டுக் குள்ளேயே குடையைவிரித்தல், துரதிர்ஷ்டத்திற்கு அறிகுறியாகும்.

* * *

### பதினேழு வருஷங்களுக்குப் பிறகு !

லாகூர் "ஜமீன்தார்" பத்திரிகாலயத்திற்குப் பதினேழு வருஷங்கள் கழித்து ஒரு கடிதம் வந்திருக்கிறது. 1912-ம் வருஷம் நவம்பர் மாதம் 24-ந் தேதி லாகூர் ஆர். எம். எஸ் ஆபீசில் போடப்பட்ட ஒரு கார்டு, 1929-ம் வருஷம் மே மாதம் 29-ந் தேதி மேற்படி "ஜமீன்தார்" காரியாலயத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நூர் அகமத் என்பவரால் எழுதப்பட்ட இந்தக் கார்டு எட்வர்ட் அரசர் காலத்து காலணா கார்டாயிருக்கிறது. இதில் ஐந்து இடங்களில் தபாலாபீஸ் முத்திரைகள் இருக்கின்றன.

* * *

### ஓடும் ரேயிலில் துணிகரமான கொள்ளை

மைசூர் ரெயில்வேயைச் சேர்ந்த பீரூர் - ஷிமோகா கிளைப்பாதையில் சமீபத்தில் ஒரு துணிகரமான கொள்ளை நடைபெற்றது. பீரூர் ஸ்டேஷனில் ஓர் ஐரோப்பியரோ அல்லது ஆங்கிலோ இந்தியரோ, மெயில் வண்டியின் இரண்டாவது வகுப்பு வண்டியில் ஏறினர். இந்த இரண்டாவது வகுப்பு வண்டி, மெயில் வானுக்குப் பக்கத்தில் இருந்தது. வேறு ஒருவரும், தன் வகுப்பில் ஏறாதபடி இந்தப் பிரயாணி தடுத்து வந்தார். விடியற்காலை, இந்த வண்டி ஓரிடத்தில் சிறிது நேரம் நின்று பிறகு செல்ல ஆரம்பித்தது. இந்தப் பிரயாணி, ரெயில்வேகார்டு இருக்கும்வண்டிக்கு வந்து, கார்டின் வாயை அடைத்து, கக்கூசில் தள்ளி விட்டதாகவும், பிறகு பதினாயிரம் ரூபா நோட்டுகளை எடுத்துக்கொண்டு சென்று விட்டதாகவும் இந்தப் பிரயாணி முகமூடி யணிந்துகொண்டு வந்ததாகவும் சொல்லப்படுகின்றன. சிவபூர் என்ற ஸ்டேஷனுக்கு வந்த பிறகே இவ்விஷயம் வெளியானதாகத் தெரிகிறது. இக்களவைக் கண்டுபிடிக்க உதவுவோருக்கு, மதராஸ் போஸ்ட் - மாஸ்டர் ஜெனரல் ஆயிரம் ரூபா இனம் கொடுப்பதாகவும் மைசூர் அரசாங்கத்தார் ஐந்நூறு ரூபா இனம் கொடுப்பதாகவும் அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர்.

* * *

### மதுபானஞ் செய்யாதவர்களே வேலைக்கு வேண்டும்

மோடார் தொழிற்சாலையின் சொந்தக்காரரான ஸ்ரீமான் ஹென்றிபோர்ட், தமது தொழிற்சாலையில் மதுவிலக்கு முறையை அநுஷ்டானத்திற்குக் கொண்டுவர முயல்கிறார். ஐரோப்பா கண்டத்தில் 5000000 பவுன் மூலதனத்துடன் இவர் ஏற்படுத்தியுள்ள தொழிற்சாலையில் பதினையாயிரம்பேர் வேலைக் கெடுத்துக் கொள்ளப்படுவர். இவர்கள் குடியாதவர்களாகவே இருக்கவேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார். "இங்கிலாந்தில் மதுவிலக்கு முறையை அநுஷ்டிக்க வேண்டு மென்பது என் கொள்கையல்ல. ஆனால் கள்குடியாதவர்கள் அதிக திறமையாக வேலை செய்கிறார்கள் என்பது என் நம்பிக்கை" என்று ஸ்ரீமான் ஹென்றி போர்ட் கூறுகிறார்.

* * *

### திமிங்கிலத்தின் வயிற்றுக்குள்

திமிங்கிலத்தின் வாய் பெரியதே தவிர, அதன் தொண்டை மிகச் சிறியதென்று சாதாரணமாக நம்பப்படுகிறது. ஆனால் இதற்கு மாறாக ஒரு சம்பவம் கூறப்படுகிறது. 1891-ம் வருஷத்தில் பாக்லண்டு தீவில் சிலர் திமிங்கில வேட்டையாடினர். திமிங்கலம் பிடிபட்டது. ஆனால் வேட்டையாடினவருள் ஒருவன் காணப்படவில்லை. மறுநாள் திமிங்கலம் கொல்லப்பட்டு அதன் வயிறு பரிசோதிக்கப்பட்டது. அங்கே, மேலே காணப்படாத மனிதன், மூர்ச்சையாகிக் கிடந்தான். உடனே தக்க சிகிச்சை செய்யப்பட்டது. மூன்று வாரங்கழித்து இவன் மீண்டும் தன் தொழிலை ஆரம்பித்தான். திமிங்கிலத்தின் வயிற்றுக்குள் மூச்சுவிட முடியுமென்றும், ஆனால் மிக உஷ்ணமாயிருக்கிறதென்றும், தான் ஒரு சிறைச்சாலையாக அதைக் கருதியதாகவும், தனக்கு மிகுந்த பயமாயிருந்ததென்றும் அவன் கூறினன்.

* * *

### வக்கீல்களின் பணம்

வக்கீல்களைப்பற்றி ஒரு வாரப் பத்திரிகையில் ஒருவர் பின் வருமாறு கூறுகிறார்:—

"இன்னும் சில நாட்களுக்குள் ஆயிரக்கணக்கான வாலிபர்கள், தங்கள் வாழ்க்கையை இனி எப்படி நடத்துவ தென்பதைப் பற்றி முடிவுசெய்ய வேண்டியவர்களாயிருக்கிறார்கள். ஆனால் எவரும் வக்கீல்களாக வேண்டாமென்று மட்டும் நான் கூறுவேன். இது பலர்க்கு ஆச்சரியமாயிருக்கலாம். ஆனால் நன்றாகக் கவனியுங்கள். பிறகு தீர்மானித்துக்கொள்ளுங்கள். சென்ற தலைமுறையில் சென்னையில் பிரபலமாயிருந்த வக்கீல்களின் நிலைமை என்ன? அவர்கள் குடும்பத்தின் ஸ்திதி என்ன? சென்ற தலைமுறையில் மிகுந்த ஆடம்பரமாக வாழ்ந்திருந்த வக்கீல்களின் சந்ததியார் இப்பொழுது எங்கிலேயிலிருக்கிறார்கள்? சிலருடைய வீடுகள் கூட விற்கப்பட்டு விட்டன. வக்கீல்களால் சம்பாதிக்கப்பட்டபணம் எப்பொழுதும் ஸ்திரமாக இருப்பதில்லை."

* * *

### எதிர்காலத்துக் கட்டடங்கள்

எதிர்காலத்தில் நடைபெறப் போகும் யுத்தங்கள், பெரும்பாலும் ஆகாய விமானங்கள் மூலமாகவே நடைபெறும் என்பதை உத்தேசித்து, அவைகளின் தாக்குதலினின்றும் காப்பாற்றிக் கொள்ள புதிய மாதிரியான வீடுகள் முதலியவைகள் கட்ட இப்பொழுது அமெரிக்காவில் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இக்கட்டடங்களின் சுவர்களும் அஸ்திவாரமும் காங்கிரீட்டினால் அமைக்கப்படும். ஒவ்வொரு மாடியிலும், பிராணவாயு நிறைந்துள்ள டாங்கும், விஷக்காற்றை எதிர்த்து நிற்கும் சக்தியுடைய அறையும் இருக்கும். இவை தவிர, பூமிக்குக் கீழ் பல மாடிகள் இருக்கும். இவைகள், ஆகாயத்திலிருந்து வெடிகுண்டுகள் போட்டால், எதிர்த்து நிற்கும். ஒரு பழுதும் ஏற்படாது. இக்கட்டடங்களின் கீழே ரோட்டுகளும், ரெயில் பாதைகளும் அமைக்கப்படும். தண்ணீர் பம்புகளும், மின்சார சக்தி உற்பத்தி சாலைகளும் அமைக்கப்படும்.

* * *

### கிரேட் பிரிட்டனில் பத்திரிகைகள்

இங்கிலாந்தில் முதன் முதலாக 1663-ம் வருஷத்தில் பத்திரிகை தோன்றியது. லண்டனில் மட்டும் 392 பத்திரிகைகள் இருக்கின்றன. இவைகளில் காலைப்பத்திரிகைகள் 21 ம், மாலைப் பத்திரிகைகள் ஆறும், லண்டனைத் தவிர்த்து, இங்கிலாந்திலும் வேல்ஸிலும், 35 காலை தினசரிப் பத்திரிகைகளும், எண்பது மாலை தினசரிப் பத்திரிகைகளும் வெளியாகின்றன. ஸ்காத்லாந்தில் காலைப் பத்திரிகைகள் ஆறும் மாலைப்பத்திரிகைகள் பத்தும், ஐர்லாந்தில் எட்டு காலைப்பத்திரிகைகளும் ஐந்து மாலைப் பத்திரிகைகளும் வெளியாகின்றன. நாலரை கோடி ஜனத்தொகையுடைய கிரேட் பிரிட்டனில் 175 தினசரிப்பத்திரிகைகள் இருக்கின்றன. கீழ்க்கண்ட தினசரிப் பத்திரிகைகளுக்குச் சந்தாதார்கள் வருமாறு:— "டெயிலி மெயில்" 1817147; "டெய்லி எக்ஸ்பிரஸ்" 855000; "டெயிலி ஸ்கெச்" 837654; "ஈவினிங் நியூஸ்" 894568; "ஸ்டார்" 802600; "நியூஸ் அப் தி வொர்ல்ட்" 3000000.

---

உணவுப் பொருள்களில் மின்சார சக்தியைச் செலுத்தி அதன் மூலம் சுலபமாகச் சமைக்கும் முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஒரு நிமிஷத்தில் உருளைக்கிழங்கை வேக வைத்துவிடலாம்; இரண்டு விநாடிகளில் முட்டையைப் பொரித்து விடலாம்.

# மணித்திரள்

ஆப்கானிஸ்தானத்தில் யானைகளைப் பந்தயம் விடுவது வழக்கமாம்.

இங்கிலாந்தில் மொத்தம் 52332 மைல்களுக்கு ரெயில் வண்டிகள் ஓடுகின்றன.

நமது கண்களின் இமைகள் நிமிஷத்திற்கு நூறு முறை அடித்துக் கொள்கின்றன.

பகற்காலத்தைக் காட்டிலும் இராக் காலத்தில் மின்சார சக்தி குறைவாகச் செலவழிகிறது.

நார்வேயில், திமிங்கில வேட்டைக்காக இனி ஆகாயவிமானங்களை உபயோகப்படுத்துவார்களாம்.

சென்ற வருஷம் இங்கிலாந்து ஐம்பது லட்சம் பவுன் பெறுமான பூக்களை ஏற்றுமதி செய்தது.

பாபிலோனில் கிறிஸ்து பிறப்பதற்கு நாலாயிரம் வருஷங்களுக்கு முன்னர் வைரங்கள் வழக்கத்தில் இருந்தனவாம்.

அமெரிக்காவிலுள்ள சில ஹைஸ்கூல்களில் ஆகாய விமானப் பயிற்சியை பாடமாகக்கற்றுக் கொடுக்கிறார்களாம்.

நியூயார்க்கிலுள்ள சில ஹோட்டல்களில், சிவப்பு மயிர் உள்ள பரிசாரிகைகளுக்கு அதிகக் கூலி கொடுக்கப்படுகிறதாம்.

வைரங்கள் முதலியவற்றை அறுத்துச் சரியான உருவத்தில் அமைக்க ஓர் இயந்திரம் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது.

இங்கிலாந்தில் 1904-ம் வருஷத்தில் "சிடி ஆப் ட்ரூரோ" என்ற ஓர் இஞ்சின் மனிக்கு 102 மைல் வீதம் ஓடிற்றும்.

மகாத்மா காந்தி இதுகாலை வறுக்கப்படாத கோதுமையையும் பச்சைக்கறி காய்களையுமே உணவாகக் கொள்கிறாராம்.

பிரான்சு, பிரிட்டனுக்குக் கொடுக்கவேண்டிய கடனில் 1919-ம் வருஷ முதல் இதுவரை 127000,000 பவுன் கொடுத்திருக்கிறது.

அமெரிக்காவில் சமீபத்தில் இரண்டு குடியானவர்கள், தங்கள் மனைவிமார்களை,பிள்ளை குட்டிகளுடன் முறையே மாற்றிக்கொண்டார்கள்.

லேப்ரடார் பிரதேசத்திலிருந்து கொண்டுவரப்பட்ட ஒரு குள்ள நாய் சமீபத்தில் லண்டனில் ஆயிரம் பவுனுக்கு விலை போயிற்றும்.

அமெரிக்கா ஐக்கியமாகாணத்தில் 1928-ம் வருஷத்தில், ஆகாய விமானங்கள், 10472024 மைல் தூரம் சுற்றுப் பிரயாணம் செய்திருக்கின்றன.

இங்கிலாந்தில் மிகப் பெரிய ரெயில்வே ஸ்டேஷன் வாடர்லூ ஸ்டேஷனேயாகும். இதில் 14628 அடி நீளமுள்ள பிளாட்பாரங்கள் இருக்கின்றன.

டாக்டர் வில்லியம் கெங்கிரி கி என்ற ஒரு சாஸ்திரி, மீன்களிலிருந்து மனிதனுடையமுகம் அமைந்தது என்று ஆராய்ச்சி மூலம் நிர்ணயம் செய்கிறார்.

நகைச் சுவையை அதிகப்படுத்த ஒவ்வொரு சர்வகலா சாலையிலும் தனிப்பட்ட ஸ்தாபனங்கள் ஏற்படுத்த வேண்டுமென்று சில அறிஞர் கூறுகிறார்கள்.

மன திருப்தி யின்றி, சோர்வே புள்ளவர்கள், சீக்கிரத்தில் வியாதிக் குட்படுகிறார்கள் என்று ஜர்மனியிலுள்ள சில வைத்தியர்கள் கண்டுபிடித் திருக்கிறார்கள்.

சமீபத்தில் நியூயார்க்கில் கண்ணேயுடன் இருந்த ஒருவருக்கு, வேறொருவருடைய கண்ணைப் பிடுங்கி வைத்துவிட்டு குணப்படுத்தி விட்டார்களாம்.

வருங்காலத்தில், இங்கிலாந்திலிருந்து பிரான்சுக்கு ஐந்து நிமிஷங்களில் செல்லக் கூடியவாறு சில சாதனங்கள் மேனாட்டாரால் கண்டு பிடிக்கப்பட்டு வருகின்றன.

மெஸபொடோமியாவிலுள்ள குகைகளில் முதன் முதலாகப் பத்து லட்சம் வருஷங்களுக்கு முன் மனிதன் தோன்றினான் என்று ஓர் அறிஞர் கண்டுபிடித்திருக்கிறார்.

லண்டனிலுள்ள குதிரைக்காரன் ஒருவன் பல மிருகங்களையும் பட்சிகளையும் வளர்த்து வருகிறான். இப்பட்சிகள் மிகுந்த அந்நியோந்யமாக வாழ்ந்து வருகின்றன.

பவுன்டன் பேனா முதன் முதலாக பதினேழாம் நூற்றாண்டிலேயே உபயோகிக்கப் பட்டதாம். அப்பொழுது பிளாட்டிடம் காகிதத்தின் உபயோகம் இருந்ததில்லையாம்.

முப்பதாயிரம் பவுன் செலவழித்துக் கட்டுவிக்கப்பட்ட ஓர் ஆகாய விமானத்தின் மேல் கூரை மாத்திரம் ஆயிரம் பவுன் செலவில் கையாலேயே சித்திரிக்கப்பட்டிருக்கிறதாம்.

சமீபத்தில் பணக்காரரான ஓர் அமெரிக்கர், இங்கிலாந்தில் இறந்து போய்விட்டார். அட்லான்டிக் மகா சமுத்திரத்தைக் கடந்து செல்ல இவர் பயந்தே இங்கிலாந்தில் தங்கிவிட்டார்.

துரதிருஷ்டிக் கண்ணாடிக்கென்று தயார் செய்யப்பட்ட ஒரு கண்ணாடியை குளிர்ச்சி செய்துச் சரியாகப் படியுமாறு செய்ய ஒரு வருஷம் பிடித்ததாம். இக்கண்ணாடி ஒன்றரை டன் நிறையுள்ளது.

தேம்ஸ் நதியின் கடலில், லண்டனிலுள்ள ஒரு செல்வர், தமது நண்பர் பலருக்கு ஒரு விருந்தளிக்கப் போகிறாராம். அப்பொழுது விருந்தாளிகள் மீன்கள்போல் வேஷம் போட்டுக்கொண்டு வரவேண்டுமாம்.

வேண்டும்போது சுருட்டைப் பற்ற வைத்துக் கொள்வதற்குச் சௌகரியமாயிருக்கும் பொருட்டு, கைத்தடியில் மின்சார விளக்கு அமைக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய தடி ஒன்றுசமீபத்தில்லண்டனில்காட்டப்பட்டது.

தென்னாப்பிரிக்கா வைரச் சுரங்கங்களிலிருந்து 1890-ம் வருஷத்திலிருந்து எடுக்கப்பட்ட வைரங்களை ஒன்றுசேர்த்தால் மூன்றரை அடி சதுரமும், பன்னிரண்டு அடி உயரமும் உள்ள ஒரு ஸ்தம்பத்தைக் கட்டலாமாம்.

இங்கிலாந்தில் நான்கு பெரிய ரெயில்வே தொடர்கள் இருக்கின்றன. இவைகளில் சீசன் டிக்கட் வைத்துக்கொண்டு பிரயாணஞ் செய்வோரைத் தவிர, மொத்தம் 1068984221 பேர் வருஷந்தோறும் பிரயாணஞ் செய்கின்றனர்.

இப்பொழுது வர்ணங்கள் பூசுவதென்றால் பிரஷ் எடுத்துக்கொண்டு கையாலேயே பூச வேண்டியிருக்கிறது. எட்டு பேர் பூச வேண்டிய வேலையை ஓர் இயந்திரம் செய்யக்கூடியவாறு ஒரு புதிய கருவி கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீமான் எஸ். எம். சாலோமன் என்ற ஒரு யூதர் ஆறுலட்சம் பவுன் பெறுமான தமது பூஜை சாமான்களை தேசத்திற்கென்று உயில் எழுதி வைத்திருக்கிறார். இவை, பிரிட்டிஷாரின் பாதுகாப்பின் கீழ் பாலஸ்தீனத்தில் வைக்கப்படும்.

உலகத்தில் மிகப்பெரிய கட்டிடம் சிகாகோ நகரத்தில் கட்டப்படும். இது எழுபத்தைந்து மாடி கொண்டதாயிருக்கும். இதன் உயரம் 1022 அடி இருக்கும். இதன் கீழ்த்தளத்தில் ஆயிரம் மோட்டார்வண்டிகள் விட்டு வைப்பதற்குப் போதிய இடம் இருக்கும்.

தாமஸ் பாட்டி என்ற ஒரு சிற்பி சிறிய வீடு ஒன்று (பொம்மை வீடு) கட்டியிருக்கிறார். இதைக் கட்டி முடிக்க இருபத்திரண்டு வருஷம் ஆயிற்றும். இதன் மதிப்பு இரண்டாயிரம் பவுன். இதில் எல்லாச் சௌகரியங்களும் அமைந்திருக்கின்றனவாம்.

உலகத்திலுள்ள வைரங்களைச் சேர்த்து நிறுத்துப்பார்த்தால் பத்துடன் எடையிருக்கு மென்றும், இவைகளின் மொத்த காரட்டுகள் 47000000 இருக்கின்றன வென்றும் இவைகளின் மதிப்பு 5000000000 டாலர் இருக்கும் என்றும் ஓர் அறிஞர் கூறுகிறார்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி ஞேமே.—(அப்பர்.)

சென்னை 1929ஞு ஜூன்மீ 5வ

## சட்டசபை

நமது நாட்டில் முதன் முறை சட்ட சபை ஏற்பட்டபோது, அதற்கும் பொது மக்கட்கும் பெரிதுந் தொடர் பில்லாதிருந்தது. பொது மக்கள் தங் கள் கருத்தை அதன்மீது செலுத்திய தில்லை. மிண்டோ-மார்லி சீர்திருத்தம் சிறிது பொது மக்கள் கருத்தை ஈர்த் தது. மாண்டேகு - செம்ஸ்பார்ட் சீர் திருத்தம் பொது மக்கள் உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்தது.

சட்ட சபை உணர்வு நாட்டிற் பெரு கப் பெருக நாட்டிடைத் தூய்மை பெரு கிற்ரு அருகிற்ரு என்பதை நேயர்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக. இரட்டை ஆட்சியில் ஏற்பட்டுள்ள மந்திரி பதவி மக்களை மாக்களாக்கி வருவது கண் கூடு. ஆட்சி முறையில் முழுப் பொறுப்பு வழங்கப் படுமேல், "கற்ற வர்" என்று சொல்லிக் கொள்வோர் நிலை என்னுகு மென்று சொல்லவேண் டுவதில்லை.

வெறும் அரசியற் புலமை மட்டும் வாழ்விற்குப் போதாது. வேறு பல கல்வித் துறைகளும் வாழ்விற்கு வேண் டற்பாலன. இப்பொழுது எத்தகைக் கல்வி நாட்டவர்க்கு வழங்கப் படுகிற தென்பது வெள்ளிடைமலை. சிறுமைக் கல்வி மக்களை மாக்களாக்கல் இயல்பு. சட்ட சபையும், பதவி வேட்கையும் நம்மவர்களை அலைத்து அலைத்துப் பாழ் படுத்தி வருவதை உன்ன உன்ன உள் ளங் குழைகிறது.

சட்டசபை முதலிய அமைப்புக்களை வேண்டாமென்று நாம் கூறவில்லை. உல கியல் நடை முறைக்கு அவ்வமைப்புக் கள் இன்றியமையாதன. அவைகளை நல்வழியில் பயன்படுத்தல் வேண்டு மென்பது நமது கருத்து.

சட்டசபையும் பிறவும் நன்னெறியில் பயன்படுத்தப் படாமைக்கு அடிப்படை யாயுள்ள காரணமென்னை? சுய ஆட்சி யின்மையே யாகும். சுய ஆட்சியில் அமையும் சட்டசபை எவ்வளவு இழி துறையில் இயங்கினும், அதன் கண் ஒருவித தனிமை பொலியும். சுய ஆட்சி பெருத நாட்டில் பிறர் கொடையாக அமையும் சட்டசபை எத்துணை நலங் கள் செறிவதாயினும், அதனை அடிமை என்னும் இருள் சூழ்ந்து நிற்கும். அடி மைத் தன்மை பொய் புரட்டுகளை நாளடைவில் பெருக்கிக் கொண்டே போகும்.

அதிகாரவர்க்க ஆட்சி முறையில் சட்டசபை வாயிலாக நாட்டுக்கு நலன் செய்தல் என்பது ஊமன் கண்ட கன வாக முடியும். திமை விளையாதிருப்பின் போதும். ஆதலால் நாட்டுக்கு நலன் செய்ய விரும்புநர் அதிகாரவர்க்கச் சட்டசபையில் வேட்கை கொள்வது அறமாகாது.

இன்னோன்ன பல காரணங்களை உட்கொண்டே மகாத்மா காந்தி ஒத் துழையா இயக்கத்தைத் தோற்றுவித் தார். அவ்வியக்கம் சுயராஜ்யக் கட்சி யினரால் ஒடுக்கப்பட்டது. சட்டசபை யில் வானத்தை வில்லாக வளைக்கலாம் என்று அதில் நுழைந்த சுயராஜ்யக் கட்சியினர் ஒன்றுஞ் செய்ய இயலாது திகைக்கின்றனர். ஒத்துழையாமையின் இடையே சுயராஜ்யக்கட்சி போன்ற தொரு கட்சி தோன்றவேண்டுவது அவ சியமே. அக்கட்சி தோன்றித் தன் ஞல் ஒன்றும் நிகழ்த்த இயலாமையை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கி விட்டது. இனி அத்தகைய கட்சியின் இருப்பே அநாவசியம் என்று நாடு உணர்ந்து வருகிறது.

இவ்வேளையில் கல்கத்தாவில் கூடிய காங்கரஸ் ஒரு தீர்மானம் நிறுவியுள் ளது. அதாவது இவ்வாண்டின் முடி விற்குள் நேரு அறிக்கையின் கோரிக் கைக்குப் பார்லிமெண்ட் இணங்கா தொழியுமேல், வரும் ஆண்டு, முதல் திங்களிலேயே ஒத்துழையாமைக் கொடி உயர்த்தப்படும் என்பது. நேரு கோரி க்கை நிறைவேற்றப்படும் என்னும் நம்பிக்கை நமக்கில்லை. பார்லிமெண் டில் எக்கட்சி செல்வாக் குறினும், அதனுல், இந்தியாவிற்கு நலன் இல்லை என்று அறுதியிட்டுக் கூற லாம். இப்பொழுது நடைபெற்ற தேர் தலில் தொழிற்கட்சி வெற்றிபெற்றிருக் கிறது. தொழிற்கட்சி மந்திரி சபை அமைப் போகிறது. அதனுல் இந்தி யாவிற் கென்னை? இந்தியாவை நோக் கும்போது, பிரிட்டன் கட்சி என்றொரு கட்சியே நிலவுமென்பதை நாட்டார் உணர்வாராக. பிரிட்டன் நலத்துக்காக ஏற்பட்டுள்ள கட்சிகள் மீது இந்தியா கருத்தைச் செலுத்த வேண்டுவது அநா வசியம்.

இந்தியா தன்னை நோக்கி நிற்றல் வேண்டும். அது பிரிட்டனைநோக்கி நிற் பதால் பயன் விளையாது. ஏதாயினும் பிரிட்டனிலிருந்துவரின், அது நம்மவர்க் குள் பிளவை உண்டு பண்ணுவதாயிருக் கும். இந்தியா தன்னை நோக்கி நிற்கும் நிலை இப்பொழுது ஏற்பட்டு வருகிறது. லாகூர் காங்கரஸில் அந்நிலையுருக்கொள் ளும் என்று எதிர்பார்க்கிறேம்.

சட்டசபைத் தேர்தலும் நிறுத்தப் பட்டிருக்கிறது. இப்பொழுது இந்திய மக்கள் என் செய்தல் வேண்டும்? இந்தி யர் தமக்குள் வெவ்வேறு துறையில் பிறந்த வேற்றுமைகளை யெல்லாம் தொலைத்து, நாட்டு நலன்கருதி ஒற்று மைப்பட்டுக் காங்கரஸ் ஆணைவழிநிற்க ஒருப்படல் வேண்டும்.

"இவ் வொருமைப்பாடு வட இந்தி யாவில் நிகழ்ந்தாலும் நிகழலாம். தென் னிந்தியாவில் ஒருபோதும் நிகழாது" என்று நமது தென்னுட்டுச் சகோதரர் களிற் சிலர் சொல்வதைக் கேட்டு மிக வும் வருந்துகிறேம். தென்னுட்டில் ஏன் ஒருமைப்பாடு நிகழாது? சட்ட சபைநுழைவு, பதவிவேட்டை யெனில் ஒருமைப்பாடு அரிது என்று கூறலாம். அவைகளை விலக்கும் இயக்கந் தோன்றுமேல், பிணக்குக்கு வழி யாண் டுளது? வேண்டுமென்றே பிணங்குவது தேசபக்தி யாகாது.

"ஜஸ்டிஸ் கட்சியார் சட்டசபை நுழைவர்; பதவி ஏற்பர்" என்னும் எண்ணத்தால், மற்றவரும் சட்டசபை யிலும் பதவியிலும் வேட்கை கொள்கி ருர். "மற்றவர் சட்டசபையைப் பற் அவர்; பதவி மேற்கொள்வர்" என்னும் ஐயத்தால், ஜஸ்டிஸ் கட்சியார் சட்ட சபையையும் பதவியையுங் குறிக்கொ ண்டு நிற்கிறர். இருவர்க்கும் இடையில் நாடு இடுக்கணுறுகிறது. அவ்விடுக்க ணல் மக்களுக்கு உண்டாகுந் துன்பத் துக்கோர் அளவில்லை.

தென்னுட்டில் மிக நெருக்கடியான நிலை தோன்றி யிருக்கிறது. இந்நிலையை மாற்ற அவ்வக்கட்சித் தலைவர்களால் இயலும். ஆனல் வேண்டுவது ஒன்று. அஃதென்னை? தியாகம்; தியாகம்.

முன்னர் ஒத்துழையா இயக்கத்தில் சேர்ந்து உழைத்த சிலர், இப்பொழுது பிற்போக்குக் கட்சியில் சேர்ந்து கட ஞற்றி வருவது நேயர்கட்குத் தெரியும். அன்னர் அத்தகைக்கட்சியில் நுழைந்த தற்குக் காரணம், "ஒத்துழையாமை என்னும் புனித இயக்கத்தைக் காங்கரஸ் பெயராலேயே ஒடுக்கிச் சட்டசபை வேட்கையைக் காங்கரஸில் கிளப்பி விட்ட மக்கள்மீது கொண்ட காழ்ப் பே" என்று சொல்லப்பட்டது. இப் பொழுது அம்மக்கட்கே சட்டசபையில் வெறுப்புத் தோன்றி யிருக்கிறது. "சட்ட சபைக்குக் காங்கரஸ்காரர் எவ ரும் போக வேண்டுவதில்லை" என்று நேரு கூறுகிறர். காங்கரஸ் காரியக் கூட்டமும் அவ்வாறே தீர்மானித்திருக் கிறது. லாகூர் காங்கரஸ் மகாநாடு வழி நடக்கு மென்பதற்கு அறிகுறிகள் தோன்றி யிருக்கின்றன. இவ்வேளையில் எவர்க்கும் பழங் காழ்ப்பு வேண்டுவ தில்லை. காழ்ப்பை விடுத்துக் காங்கர ஸில் நுழைந்து நாட்டை ஒத்துழை யாமைக்குப் பண்படுத்துவது அறி வுடைமை. இல்லையேல் காங்கரஸுக் குள்ளேயே சட்டசபைக் கட்சியொன்று தோன்றும். அதனல் பிணக்கு வளர் ந்துகொண்டே போகும். பிணக்கு வளர்ச்சியால் நாட்டுக்கு நலன் என்னே?

தென்னுட்டுக்கு ஒரு பெருஞ் சோத னைக் காலம் நேர்ந்திருக்கிறது. இப் பொழுது அவ்வக் கட்சியிலுள்ள தேச பக்தர்கள் ஒன்றுகூடி ஒரு நல்வழி காண்பார்களாக.

## பிரிட்டிஷ் தேர்தல்

பிரிட்டிஷ் தேர்தல் மே மாதம் முப்ப தாந்தேதி நடந்து முடிவு பெற்று விட் டது. இதுகாறும் அரசாங்க நிருவா கத்தை நடத்தி வந்த கன்ஸர்வேடிவ் கட்சியார் பெருந் தோல்வி யடைந்தனர். இப்பொழுது நமக்குக் கிடைத்திருக் கும் விவரப்படி தொழிற்கட்சியினர் 287 பேரும், கன்ஸர்வேடிவ் கட்சியினர் 254 பேரும், லிபரல் கட்சியினர் 57 பேரும், எக்கட்சியையும் சாராதவர் எட்டு பேரும் தெரிந்தெடுக்கப்பட்டிருக் கின்றனர். 615 பேர் அடங்கிய காமன்ஸ் சபையில், தொழிற்கட்சியினரே பெரும் பான்மைக் கட்சியினரா யிருக்கின்றனர். ஆனல், எதிர்க்கட்சியினர் ஒன்று சேர்ந் தால், இவர் பெரும்பான்மையராக மாட் டார். தவிர, பிரிட்டிஷ் வாக்காளர் களின் மனப்பான்மை கன்ஸர் வேடிவ் கட்சியைச் சார்ந்தே நிற்கிறதென்று, மேற்படி தேர்தலில் வாக்குக் கொடுத்த வர்களின் எண்ணிக்கையினல் தெரிகி றது. கன்ஸர் வேடிவ் கட்சியின ருக்குச் சுமார் எண்பதரை லட்சம்பேர் வாக்குக் கொடுத் திருக்கின்றனர். தொ ழிற்கட்சி யினருக்கோ, அதற்குக்குறை வான பேரே வாக்குக் கொடுத்திருக் கின்றனர். லிபரல் கட்சி யினருக்குச் சுமார் ஐம்பது லட்சம்பேர் வாக்களித் திருக்கின்றனர்.

கன்ஸர்வேடிவ் கட்சித் தலைவரான ஸ்ரீமான் பால்ட்வின், தமது மந்திரி சபையுடன் ராஜினமா செய்துவிடத் தீர் மானித்து விட்டார். இங்ஙனம் செய் வதைத் தவிர இவருக்கு வேறு வழி யில்லை. தாம் பெருந் தோல்வியுற்ற பிறகும், சிலர் யோசனை கூறியபடி, லிப ரல் கட்சியாருடன் சேர்ந்து கொண்டு நிருவாகக் கயிற்றைப் பிடித்துக்கொண் டிருப்பது அரசியல் ஒழுக்கத்துக்கு மாறுனது என்று இவர் உணர்ந்தது பாராட்டத் தக்கது. சுமார் நூற்றுப் பத்து பீடங்களை இழந்த பிறகும், மந்திரிசபையை அமைக்க ஆவல் கொள்வது, வாக்காளர்களை அவ மதித்ததாக போலாகும். ஆனல் லிபரல் கட்சியினர் ஐம்பத்தேழு பேரே வெற்றி பெற்றிருந்த போதிலும், அக் கட்சியின் தலைவராகிய ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ், மற்ற இரண்டு கட்சிகளையும் ஆட்டிவைக்கும் சூத்திரக் கயிறு தம் மிடத்திலேயே இருப்பதாகவும், அதை நேரிய முறையில் பயன்படுத்தப் போவ தாகவும் பெருமை பேசிக் கொள்கிறர். இஃதொரு விதத்தில் உண்மை யென் பதை எவரும் மறுக்க முடியாது.

பார்லிமெண்டில் பெரும்பான்மைக் கட்சித் தலைவரான ஸ்ரீமான் ராம்ஸே மாக்டோனல்ட், அரசாங்க நிருவா கத்தை ஏற்றுக்கொள்ளப் போகி ருர். 1924-ம் ஆண்டில் சிறிது காலம், தொழிற் கட்சியின் நிருவாகத்தை, பிரிட்டன் பெற்றிருந்தது. ஆனல், அப் பொழுது, தொழிற்கட்சியினர் நிருவாக த்தை ஏற்றுநடத்தியதற்கும், தற்போது நிருவாகத்தைஏற்று நடத்தப்போவதற் கும்வேற்றுமை உண்டு. பெரும்பான்மை யான வாக்காளர்களின் ஆதரவைப் பெற்று, அப்பொழுது இக்கட்சியினர் நிருவாகத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. பார்லிமெண்டில் கன்ஸர்வேடிவ் கட்சி யார் தோல்வியுறவே, அடுத்தபடி பெரும்பான்மைக் கட்சியினராக இவர் அரசாங்க நிருவாகத்தை ஏற்று நடத்த வேண்டியிருந்தது. இம்முறை, அங் ஙனமன்று. தேர்தலிலேயே பெரும் பான்மைக் கட்சியினராகத் தொழிற் கட்சியினர் வெற்றி பெற்றிருக்கின் றனர்.

கன்ஸர்வேடிவ் கட்சியினரின் நிரு வாக காலத்தில் இந்தியா எத்தகைய அல்லலுற்றதென்பது ஒருபுறமிருக்க போதிலும் பிரிட்டிஷாருக்கே, ஸ்ரீமான் பால்ட்வினின் ஆட்சி முறை அதிருப்தி யைத் தந்து விட்டது. வேலையில்லாத் திண்டாட்டமும், அந்நிய நாடுகள் சம்பந்தமாக அநுசரிக்கப்பட்டு வந்த கொள்கையும் இதற்கு முக்கிய கார ணங்களாகும். இவ்விரண்டு விஷயங் களிலும் தொழிற் கட்சியினரும் லிப ரல் கட்சியினரும் ஒருமைப்பட்ட கொள்கையினராகவே இருக்கின்றனர். எனவே, வருந் தொழிற்கட்சி அரசாங் கத்தில், லிபரல் கட்சி எதிர்ப்பு அதிக மாயிராது என்று ஊகிக்க இடமுண்டு.

தொழிற் கட்சியினர் ஆதிக்கத்துக்கு வந்ததனல் இந்தியாவுக் குண்டாகும் பயனென்னவென்று சிலர் கேட்கலாம். சூநியம் என்று கூறச் சித்தமா யிருக் கிறேம். பிரிட்டனின் உள் நாட்டுக் கொள்கைகள் சம்பந்தமாகக் கட்சி வேற்றுமைகள் இருக்கின்றனவே தவிர, அந்நிய நாட்டுக் கொள்கைகள் சம்பந்த மாக எவ்வித வேற்றுமையு மில்லை என்று, தொழிற் கட்சியின் வெற்றியைக் கண்டு மனம் பொருத "லண்டன் டைம்ஸ்" பத்திரிகை எச்சரிக்கை செய்திருக்கிறது. தவிர, சென்ற தேர் தலில், எல்லாக் கட்சியாரும் ஒன்று சேர்ந்து இந்தியாவைப்பற்றி ஒன்றுமே குறிப்பிடக் கூடாதென்று முடிவு செய்து கொண்டு அப்படியே நடந்து காட்டினர். மற்றும், இந்தியர் அனைவ ராலும், வேண்டப்படாத சைமன் கமி ஷனுக்கு ஆதரவு நல்கும்படி ஸ்ரீமான் ராம்ஸே மாக்டோனல்ட், தாம் அதிகார பதவியி லில்லாத காலத்துக் கூறியிருக்கிறர். எனவே, அவர் பதவி ஏற்றதும், சைமன் கமிஷனுக்கு ஆத ரவு தேடவே முற்படுவாரென்பது திண் ணம். விண்டர்டன் கூட்டத்தார், இந் தியா மந்திரி காரியாலயத்தினின்று விலகுவது ஒருவாறு ஆறுதல் அளிக்கத் தக்கதே யாயினும், தொழிற்கட்சியினர் வந்து என்ன சாதித்து விடப்போகின் றனர் என்பது நமக்குத் தெரியவில்லை. மழுப்பி, மழுப்பி வார்த்தைகளை வளர்த் தக்கூடும். உயர்ந்த இலட்சியங்களைக் குறித்து நீண்ட வியாக்கியானங்கள் செய்யக்கூடும். ஆனல் காரியத்தில் என்னவாயிருக்கும் என்பதை நாம் கூற வேண்டுவதில்லை. ஆதலின், தொழிற் கட்சியார் ஆதிக்கத்துக்கு வந்துவிட்ட தனல், இந்திய தேசிய வாதிகள், தங்க ளுடைய உழைப்பைச் சிறிதும் தளர் த்தி விடக்கூடாதென்று மட்டும் எச் சரிக்கை செய்ய விரும்புகிறேம்.

## இடியேறு

### பாம்பன் சுவாமிகள்

பாம்பன் - ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் சென்ற வியாழக் கிழமை தமது 81-வது வயதில் பரு உடல் நீத்து நுண்ணுடல் அடையும் பேறு பெற்றுர். அவருடைய வாழ் நாளில்



அறியக் கிடக்கும் நுட்பங்கள் பல. அவைகளுள் குறிக்கத்தக்கன இரண்டு. ஒன்று, ஒரே கடவுளுண்மையில் அவர் கொண்டிருந்த உறுதி; மற்றொன்று, கடவுள் காட்சிக்கு அடிப்படை பொய் யாமை யென்னும் பேரற மென்பது. தமிழ்த் தாய்க்கு அவராற்றிய தொண்டு போற்றற் குரியது. சுவாமிகள் திரு வாய் மலர்ந்தருளிய பாக்களை நோக் குழி அவரைப் பிற்கால வில்லிபுத் தூரர் என்று பாவாணர் போற் றுவ ரென்பதில் ஐயமில்லை. சுவாமி கள் கலைப் புலமையோடு திருவ ருட் புலமையும் உடையா ரென் பதை ஈண்டுச் சிறப்பாகக் குறிப்பிடு கிறேம். அவர் பரு உடல் நீத்தமை குறித்து எவரும் வருந்த வேண்டுவ தில்லை. அவர் நுண்ணுடல் சொலற் கரிய பணிகள் ஆற்றுதற்குக் கருவி யாக நின்று நிலவும் முறையில் அவர் இவ்வுலகில் வாழ்வு நடாத்தியதை அவ ருடன் நெருங்கிப் பழகியபலர் அறிவர். சுவாமிகளால் காணப்பெற்ற மகா தேஜோ மண்டலம், சுவாமிகள் ஓம்பி வந்த முருகன் அருள் நெறியையும், தமிழ் மொழியையும் நேரிய முறையில் ஓம்பிவரு மென்று எதிர் பார்க்கிறேம். சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

## நல்லபயன் உண்டாகுமா?

சென்னை அரசாங்கத்தார், நான்கு லட்சம் ரூபா செலவில் மதுவிலக்குப் பிரசாரம் செய்ய ஒரு திட்டம் ஒழுங்கு படுத்தியிருக்கின்றனர். இருபது ஆண்டு களுக்குள் பூரண மதுவிலக்குச் சித்தி பெற வேண்டுமானல், அதற்கு முன் னல், பொது மக்களின் ஒத்துழைப் பைப் பெறுவதற்காக மதுவிலக்குப் பிரசாரம் செய்யவேண்டு மென்று அரசாங்கத்தார் கருதுகின்ற னர். இஃது எவ்வாற்றுனும் புதிதன்று. சுமார் ஐம்பது ஆண்டுகளாகவே இந் நாட்டில் மதுவிலக்குப் பிரசாரம் நடை பெற்றுக் கொண்டே வருகிறது. பொ துக்கூட்டங்கள் கூட்டுதல், துண்டுப் பிர சுரங்கள் அச்சிட்டு வழங்கல் முதலியன இந்நாட்டிற்குப் புதியனவல்ல. ஆனல் எது விரைவில் பயன்தரக் கூடியதோ அதை அரசாங்கத்தார் விட்டுவிட்டது கவனிக்கத்தக்கது. சாத்துவிக முறை யில் மதுபானக் கடைகளை மறியல் செய் வதை ஏன் ஆதரிக்கக் கூடாது? பொது மக்களை ஓரிடத்தில் கூட்டி மது விலக்குப் பிரசாரம் செய்வதில் நம் பிக்கை கொண்ட அரசாங்கத்தார் சாத்துவிக மறியல் செய்வதில் ஆபத்து இருப்பதாக எண்ண நியாயமில்லை. ஆயினும் அம்முறையைக் கையாளவோ ஆதரிக்கவோ பின் வாங்கும் அரசாங் கத்தார், விதிகள், நிருவாக உத்தியோ கஸ்தர்கள் பிரயாணப்படி, தினப்படி முதலியவைகளைக் கொண்ட நீண்ட தொரு திட்டத்தைச் செப்பஞ்செய்து அதனல்நாட்டில்கட்குடிகுறையுமென்று எதிர்பார்ப்பது, பாலை வனத்தில் அமு தத்தை எதிர்பார்ப்பது போலவே யாகும். பிரசாரத்தின் மூலமாக மட் டும், இருபது ஆண்டுகளுக்குள் பூரண மதுவிலக்கு இலட்சியத்தை அடைந்து விட முடியும் என்று உண்மையிலேயே அரசாங்கத்தார் கருதுகின்றனரா?

## "பாரதி கதர் நிலையம்"

காந்தி யடிகளிடத்துப் பேரன்புவாய் ந்தவரும், யாண்டுங் கதர் பரவுதல் வேண்டு மென்னும் பெருநோக்குடைய வருமான கோட்டாறு திருவாளர் பழ. சுப்பிரமணிய பண்டாரம் அவர்கள் முயற்சியால் சென்ற ஞாயிற்றுக் கிழமை காலை 9 மணிக்கு நாகர் கோயி லில் "பாரதி கதர் நிலயம்" என்னும் பெயர் கொண்ட ஒரு கதர் கடை திறக் கப் பட்டதை யறிந்து நாம் கழிபேரு வகை யெய்துகிறேம். நமது வாழ்த்தும் நன்றி யறிதலும் திருவாளர் சுப்பிர மணியனுர்க்கு உரியனவாக. மக்கள் அக்கதர் நிலயத்துக்குப் போதிய ஆத ரவு நல்குவார்களாக. காந்தி வாழ்க; கதர் ஓங்க.

## அமெரிக்காவில் இந்தியர்களின் நிலை

### ஸ்ரீமதி சரோஜனி தேவியின் வருணனை

அமெரிக்காவில் சுற்றுப்பிரயாணஞ் செய்து இங்கிலாந்துக்குத் திரும்பி யுள்ள ஸ்ரீமதி சரோஜனிதேவி மகாத்மா காந்திக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில் பின்வருமாறு கூறுகிறர்:-

காலிபோர்னியாவின் ஒவ்வொரு பாகமும் மிக நன்ருக இருக்கிறது. ஆனல் அங்கே குடியேறி யிருக்கும் இந்தியர்களின் நிலைமை மிக பரிதாபகரமாக இருக்கிறது. இவர்கள் இப்பிரதேசங்களில் வந்து குடியேறிச் சுமார் இருபது முப்பது வருஷங்களாகின்றன. ஆனல் சமீபத்தில் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தின் பயனக இவர்களுக்கு நில உரி மையும் பிரஜா உரிமையும் இல்லை. எனவே, இவர்கள், சிறிது காலத்திற்குமுன் தங்களுக் குச் சொந்தமா யிருந்த நிலங்களில், இப் பொழுது தொழிலாளர்களாக வேலை செய்ய வேண்டியவரா யிருக்கிறர்கள். அடுத்த வரு ஷம் தங்களுக்கு நல்ல இலாபம் கிடைக்கு மென்றும், அப்பொழுது தங்கள் தாய் நாட் டிற்குச் செல்லலா மென்றும் ஒவ்வொரு வரு ஷமும் இவர்கள் எண்ணிக்கொண்டேயிருந் திருக்கிறர்கள். இதனல் இவர்கள் ஒருவித கட்டுப்பாடின்றி வாழ்ந்துவருகின்றனர். தாய் நாட்டுச் சம்பந்தம் இவர்களுக்கு அதிகப்படி யாக இல்லாததினல் இவர்களுடைய ஒழுக்க நிலையும் ஒரு வாறு சீர்கெட்டு விட்டதென்று கூறலாம்.

இவர்களுக்குத் தங்கள் தாய் நாட்டின் மீதுள்ள பற்று அளவிடற் பாலதன்று. இவர் களுக்குள்ள தேசபக்தியைக் கண்டு என் மனங் கலங்கிவிட்டது. இவர்களுடைய நிலை மையை உயர்த்தவும் இவர்களுடைய துன்பத் தை நீக்கவும், இவர்களுக்கு ஆறுதலை அளிக்க வும், இவர்களுக்கும் இந்தியாவுக்கும் ஒரு சம் பந்தத்தை உண்டு பண்ணவும் என்ன செய் யக்கூடும்? இந்தியாவிலிருந்து, அவ்வப்பொ ழுது, அறிவுள்ள அநுபவமுள்ள ஒரு சீக்கி யத்தலைவரை அனுப்பவேண்டுமென்று கூறு வேன். சீக்கியர்களைத்தவிர, பஞ்சாப் முஸல் மான்களும் இங்கே இருக்கிறர்கள். இவர்களிற் சிலர் மெக்ஸிகோ நாட்டு ஸ்திரீகளை மணஞ் செய்துகொண்டிருக்கிறர்கள். சீக்கியர் பல ரும் குடும்பத்துடன் வாழ்ந்து கொண்டிருக் கின்றனர். ஆப்பிரிக்காவுக்கும் அமெரிக்கா வுக்கும் சுற்றுப் பிரயாணஞ் செய்து வந்தபிறகு நான் தெரிந்துகொண்ட உண்மை என்னவென்ருல், உலகத்தின் சுதந்திர தேசங்களில் இந்தியா சமநிலை யடையும் வரை வெளி நாடுகளிலுள்ள இந்தியர்களின் நிலைமை எவ்விதத்திலும் திருப்தியாயிராது.

## நன்கொடை

சிங்கப்பூர், இரங்கூன் ரோட், 77. கேம்பல்லேன் ஸ்ரீமான் எம். சீதாபதி அவர்கள் காந்தி கதர் நிதிக்காகப் பல அன்பர்களிடமிருந்து இருபது ரூபாய் வசூலித்து நமக்கு அனுப்பி யுள்ளார் கள். கொச்சின் சைனவைச் சேர்ந்த பக்ளீவிலுள்ள ஸ்ரீமான் ஆ. லெமோ ன்ஸ் என்னும் அன்பர் பின் வரும் ஊர் களிலுள்ள இந்தியர்களிடம் பணம் வசூ லித்துக் கதர் நிதிக்காக சேர்க்கும்படி அனுப்பியிருக்கிறர்:—

| ஊர் | வெள்ளி |
|---|---|
| பக்ளீவ் | 183—0—0 |
| சொக்திரான் | 101—0—0 |
| ரஜியா | 39—0—0 |
| கங்தோ | 173—0—0 |
| லொங்கியன் | 42—0—0 |
| சொடக் | 6—0—0 |
| சடையா | 34—0—0 |
| வில்லம் | 12—0—0 |
| திராவின் | 60—0—0 |

ஆக வெள்ளி 650-க்கு ரூ. 854-12-0-ம் ஒரு பிரெஞ்சுக் கடிதமும் வரப்பெற் றேம். இதை செக் வடிவமாகக் கதர் நிதிக்கு ஸ்ரீமான் ச. இராஜகோபாலாச் சாரியார் வாயிலாக அனுப்பிவிட்டோம். தமக்கு இத் தொகைகள்வந்து சேர்ந்து விட்டன என்றும், இவைகள் மேற்படி பிரெஞ்சுக் கடிதத்துடன் மகாத்மா காந் திக்கு அனுப்பப் பட்டன என்றும் ஸ்ரீமான் ச. இராஜகோபா லாச்சாரியா ரிடமிருந்து கடிதமும் கிடைத்திருக்கி றது. இவ்வன்பர் அனைவருக்கும் எமது நன்றியறிதலான வணக்கத்தைச் செலு த்துகிறேம்.

## தேசீய அமைப்பு

### உண்மையும் ஒழுங்குமே தேவை

மகாத்மா காந்தி சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில் எழு தியதன் சாரம் வருமாறு:—

சமீபத்தில் அகில இந்திய காங்கிரஸ் கூட்டத்தார் நிறைவேற்றி யுள்ள தீர் மானத்தின்படி, அடுத்த ஆகஸ்ட் மாதக் கடைசிக்குள் ஸ்திரீ புருஷர்களுட்பட எழ ரை லட்சம்பேர் காங்கிரஸ் அங்கத்தினர் களாதல் வேண்டும். இவர்கள் காங்கிரஸ் கொள்கைகளை அங்கீகரித்தவர்களாய், காங் கிரஸ் செய்தியை அறிந்தவர்களாய் இருக்க வேண்டும். இந்த அங்கத்தினர் தொகை, நான் ஏற்கனவே எண்ணியிருந்த தொகை யில் எட்டில் ஒரு பங்காகும். சட்டசபை அபேட்சகர்களுக்கு வாக்குக்கொடுக்கும் தகு தியுடையவர்களின் எண்ணிக்கையில் இஃது எட்டில் ஒரு பங்காகும். தவிர, சுதேச சமஸ் தானங்கள், பர்மா, எல்லைப்புற மாகாணங்கள் முதலியபிரதேசங்கள் இதனின்றும் விலக்கப் பட்டிருக்கின்றன. அகில இந்திய காங்கிரஸ் கூட்டத்தில் காங்கிரஸ் அமைப்புச் சம் பந்தமான இந்தத் தீர்மானம் மிகுந்த உற்சாகத்துடன் நிறை வேற்றப்பட்டது. இதை நிறை வேற்றிய அங்கத்தினர் கள் உண்மையிலேயே உற்சாகமுள்ளவர் களாயிருந்தால், ஆகஸ்ட் மாத காலவரை யறைக்குள் போதிய அங்கத்தினர்களைச் சேர்த்து விடவேண்டும். நாம் ஊக்கத்துடன் இது சம்பந்தமாக உழைத்தோமானல், 1921-ம் வருஷத்தைப்போல் பலமான ஓர் அமைப்பு ஏற்பட்டு விடும். அந்நியத் துணி பகிஷ்காரம், மதுவிலக்கு, தீண்டாமை விலக்கு ஆகிய இம்மூன்று விஷயங்கள் சம்பந்தமாகவும் நியமிக்கப்பட்டிருக்கும் சப் கமிட்டிகள் சரியானபடி வேலை செய்ய வேண்டுமானல் இந்த அமைப்பு அவசிய மாகும்.

### கதரும் வாக்குரிமையும்

கதர் தரித்தவரே வாக்களிக்க உரிமை யுடையவர் என்ற விஷயம் வாதிக்கப்பட் டது. வயது வந்த எவரும் நான்கணு சந்தா செலுத்திக் காங்கிரஸில் அங்கத்தினராகச் சேரலாம். இந்த விதமாகக் காங்கிரஸ் ரிஜிஸ் டரில் அரசாங்க ஒற்றர்களின் பெயர்கள் கூடக் காணப்படுகின்றன. ஆனல் இவர் கள் காங்கிரஸ் கூட்டங்களில் வாக்களிக் கும்போது, கதர் தரித்துக் கொண்டிருப் பவர்களாய் இருக்க வேண்டும். காங்கிரஸ் அமைப்பு சரியாக இயங்கிக்கொண்டு செல் வதற்கு இஃதொரு தடையா யிருக்கலாம். கதர் தரித்தவர்களே வாக்களிக்கலாம் என்றுள்ள விதியை எடுத்து விடலாமா அல்லது அப்படியே வைத்துக் கொள்ளலா மா வென்பதைப்பற்றிக் காங்கிரஸில் புனரா லோசனை செய்யலாம். இனியும், காங்கிரஸ் காரர்களுக்குக் கதரில் நம்பிக்கையில்லா விட் டால், இந்த விதியை அடியோடு எடுத்து விடவேண்டியதுதான். கதரில் நம்பிக்கை யிருந்தும், இந்த விதி வேண்டாமென்று பட்டால் எடுத்துவிட வேண்டுவதுதான். காங்கிரஸின் நற் பெயரைக்காப்பாற்ற இந்த விதி இருக்கவேண்டுமென்று தோன்றினல் இஃது இருக்கவேண்டியதுதான். நான் அங் கத்தினர்களைச் சேர்க்கும் ஒரு பிரசாரகனுக இருந்தால், அங்கத்தினர்களைச் சேர்ப்ப தோடு மட்டும் இருக்கமாட்டேன். கதர் விற் பனை செய்வேன்; மதுவிலக்கு தீண்டாமை விலக்குப்பிரசாரம் செய்வேன். என்னல் அணுகப்படுவோர் அரசியல் அறிவுபெற்ற வர்களாய் இருந்தால், நேரு அரசியல் திட் டத்தைப்பற்றி அவர்களிடம் பிரஸ்தாபம் செய்வேன். 1929-ம் வருஷம் டிசம்பர் மா தம் 31-ந் தேதிக்குள் அத்திட்டத்தை அர சாங்கத்தார் ஒத்துக்கொள்ளா விட்டால், பிறகு சுயேச்சையே நமது இலட்சியம் என் பதைத் தெளிவுபடுத்திச் சொல்வேன். அந்த மாதிரி சந்தர்ப்பத்தில் ஒவ்வொரு காங்கிரஸ் காரரும், ஒத்துழையா இயக்கத்திலோ சட்ட மறுப்பிலோ சேரவேண்டுமென்பதைப்பற் றியும் வற்புறுத்திச் சொல்வேன். உண்மை யான ஓர் அமைப்பு இருந்து, ஒழுங்கான முறைகளுக்கு உட்பட்டு நடைபெற்ருல் அடுத்த வருஷத்தில் சட்டமறுப்பு தொடங் கும்போது எவ்விதக்கஷ்டமும் இராது.

அமெரிக்காவில் மூன்று மாதத்தில் மோட் டார் வண்டிகளில் அகப்பட்டு மரணமடைந் தோர்களின் தொகை 4500.

o o o

சென்னை, பெரம்பூர் பாரக்ஸ் சாலையி லுள்ள குருசடி சேரியில் 3-6-29 பகல் வேளையில் 150 குடிசைகள் தீக்கிரையாயின. இதனல் ஒரு கிழவியும், ஒரு குழந்தையும் மரணமடைந்தார்கள். சுமார் 250 குடும்பத் தினர் வீடின்றி, உணவின்றித் தவிக்கின் றனர்.

## அந்நியத் துணி பகிஷ்காரம்

### நூல் நூற்கவேண்டியதன் அவசியம்

சென்றவார "யங் இந்தியா" பத்தி ரிகையில் மகாத்மா காந்தி எழுதிய கட் டுரையில் ஒரு பாகம் வருமாறு:—

எல்லோரும் கதர் உபயோகித்தால், போதிய கதர் மார்க்கெட்டில் அகப்படாதென் றும், முன்போலவே, மில் முதலாளிக ளுடைய தயவுக்கு எதிர்பார்த்துக் கொண் டிருக்க வேண்டுமென்றும் சிலர் அஞ்சுகின்ற னர். போதிய கதரை நாம் உற்பத்தி செய்து கொள்ளாவிட்டால், இந்த ஆபத்து உண்மை யானதுதான். (1) நமக்கு நாமே நூல் நூற் றுக் கொள்வது. (2) கூலிக்காக நூல் நூற் பது. (3) தியாக உணர்ச்சியுடன் நூல் நூற்பது ஆகிய இம்முறைகளை நாம் கை யாள வேண்டும். இவைகளில் முதலாவது மிகவும்முக்கியமானது. இதனை நாம் சரியான படி அநுஷ்டித்து வந்தால் இஃது எப்பொழு தும் காப்பாற்றுந் தன்மையது. இத்துறையில் சரியானபடி பிரசாரம் இப்பொழுதே ஆரம் பிக்கப்பட்டிருக்கிறது. காதி பிரதிஷ்டானத் தைச் சேர்ந்த ஸ்ரீமான் சதீஷ் சந்திரதாஸ் குப்தா இப்பிரசாரத்தின் அவசியத்தை உணர்ந்து சரியானபடி அமைத்து வருகிறர். கதர் உற்பத்திக்கு இதுவே சுலபமான மார்க் கம். இரண்டாவது கூலிக்காகவும் நூல் நூற் கலாம். ஆனல் பஞ்சை சேகரித்துக் கொள்ள சிறிது மூலதனம் வேண்டும். நூல் விற்பனைக்குச் சரியான வாடிக்கைக்காரர்கள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இதனல் நமக்கு வியாபார சக்தி அதிகமாகிறது. மத் திய வகுப்பாரின் பிழைப்புக்கு ஒரு வழி ஏற் படுகிறது. மூன்ருவது முறை, அதாவது தியாக உணர்ச்சியுடன் நூல்நூற்றல் என்பது ஒரு சிலராலேயே அநுசரிக்க முடியும். தியா யாகத்தின்அவசியத்தை தேசத்தார் உணர்ந்து விட்டால், கணக்கற்ற நூலை நாம் உற்பத்தி செய்துவிட முடியும். நகரசபைகளால் நடத் தப்படும் பள்ளிக்கூடங்களில் நூல் நூற் பதைக் கட்டாயபாடமாக ஏற்படுத்திவிட்டால் லட்சக்கணக்கான பேருக்கு அவர்கள் துணி சப்ளை செய்ய முடியும். நகரவாசிகள், தினந் தோறும் அரைமணி நேரம் நூல் நூற்பு தென்ற முறையை அநுசரித்தால், குறைந் தது நூறு கஜம் நூலாவது தினந்தோறும் உற்பத்தி செய்ய முடியும். இந்நூல் நூற்கும் இந்த அரைமணி நேரத்தை வேறு உபயோக மான வழியில் செலவழித்தால் பிரயோஜன முண்டு என்று சிலர் கருதலாம். ரொக்கவியா பாரி ஒருவன், தண்ணீரில்லாத ஓரிடத்தில் அகப்பட்டுக் கொண்டு விட்டால், நல்ல தண் ணீர் சேகரிப்பதிலேயே அவன் காலத்தைக் கழிப்பான். அதுபோல, இந்த வருஷத்திற் குள் அந்நியத் துணிகளைப் பூரணமாக பகிஷ் கரித்து விட வேண்டு மென்ற முனைந்து நிற்கும் நாம், 'இந்தப் பகிஷ்காரம் நிறை வேறும்வரை நூல் நூற்கவேண்டியது அவசியமேயாகும். இந்தப் பகிஷ்காரத்தின் அவசியத்தை நாம் சரியான படி உணராத தால், நூல் நூற்கவேண்டிய அவசியத்தின் உண்மை நமக்குப் புலனுவதில்லை. எப்படி யிருந்த போதிலும், மேலே கூறப்பட்ட மூன்று முறைகளும் இப்பொழுது பலராலும் அநுஷ்டிக்கப்படுகின்றன. ஆதலின் கதர்ப் பஞ்சம் ஏற்படும் என்று எவரும் அஞ்ச வேண்டுவதில்லை. நாம் மட்டும் நமது சக்தி கொண்டமட்டும் உழைப்போமாக.

3-6-29ல் இரங்கூன் ஆதம்ஜிஹாஜி தாவுத் திக்குச்சி சாலையில் உண்டான தீவிபத் தினல், சுமார் 12 லட்சம் ரூபா சேதமேற் பட்டுள்ளது.

o o o

விபவஞுவைகாசிமீ 21வ (3-6-29) வேதா ரணியம் காந்தி இலவச வாசகசாலையில் ஸ்ரீ மான் அப்பாக் குட்டியா பிள்ளை தலைமையில் "ஸ்ரீ தாயுமான சுவாமிகள் புத்தக நிலையம்" திறந்து வைக்கப்பட்டது என்று ஒரு நிருபர் எழுதுகிறர்.

o o o

31-5-29ல் கணியூர் வாலிப முஸ்லீம் சங்கத் தின் சார்பாக சங்க விடுதியில் சென்னை "ஸைபுல் இஸ்லாம்" பத்திராசிரிய ராகிய ஆலி ஜனுப் மௌலானு மௌல்வி அஹமது ஸயீது ஆலீம் சாஹிபு அவர்கள் "சமூக முன்னேற்றம்" என்பதைப்பற்றி விரிவுரை நிகழ்த்தினர்கள் என்று ஒரு நிரு பர் தெரிவிக்கிறர்.

## சந்தை இரைச்சல்

"காட்டான்" கேட்டது

பிரிட்டிஷ் தேர்தல் முடிந்து விட்டது. ஸ்ரீமான் ராம்ஸே மாக்டோனல்ட் பிரதம மந்திரியாக வரப்போவதை உத்தேசித்து அவருக்கு வாழ்த்துக்கூற இந்தியாவில் பல புதிய சங்கங்கள் தோன்றப் போகின்றனவாம். அச்சங்கங்களில் எதற்கும் தாங்கள் தலைவராக இருக்கமுடியாதென்று ஸர் சிவசாமி ஐயர், ஸர் சிமன்லால் சேதால்வாட், ஸர் முகம்மது ஷாபி முதலியோர் கண்டிப்பாக மறுத்து விட்டதாக சந்தையில் பேசிக்கொள்கிறார்கள்,

* * *

சென்னை மாகாணத்தில் தேர்தல் நாடகம் நடைபெறுவதாக இருந்தது. அதில் மந்திரிப் பதவிகளை ஏற்றுக்கொள்ளுதல் என்ற ஒரு சீனையும் சுயராஜ்யக் கட்சியார் நடத்திக் காட்டிவிட்டார்கள். ஆனால் கோஷன் பிரபு அந்நாடகம் நடைபெறாதபடி செய்து விட்டார்.

* * *

எனவே, வேதாரணிய மகாநாடு பலருக்கு 'சப்பி'ட்டு விட்டதாம். அப்படி அங்கே போனாலும் ஸ்தல மகிமையை உத்தேசித்தே போகப் போகிறார்களாம்.

* * *

தேர்தல் காலத்தில் தங்கள் பிழைப்புக்கு வழி ஏற்படுமென்று நம்பியிருந்தோர் அனைவரும் இவ்வேமாற்றத்தைக் கண்டு லார்ட் கோஷன் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப் போகிறார்களாம்.

* * *

"தேர்தல் நடைபெற்றிருந்தால் நான் கட்டாயம் ஜெயித்திருப்பேன்" என்று ஸர் முதல் ராய் சாயபு வரையில், 'உலகபந்து' முதல் "சர்வநேசர்" வரையில் ஒவ்வொருவரும் வீரப்புப் பேசிக்கொண்டிருப்பதாக ஓர் ஆகாசதந்தி கூறுகிறது.

* * *

வங்காளம், அஸ்ஸாம் ஆகிய இரண்டு மாகாணங்களைத்தவிர மற்றெல்லாமாகாணங்களிலும், உள்ள அச்சாபீசுகளுக்கும், தபாலாபீஸுகளுக்கும், வாடகை மோடார் வண்டிகளுக்கும் சுக்கிலவருஷம் கெட்ட வருஷம் என்று ஒரு சோதிடர் கூறுகிறார். இதை மறுத்துக் கூறுவோருக்கு ஒரு 'கப்' உப்புமாவும் ஒரு 'கப்' காபியும் இனாம்!

* * *

லார்ட் இர்வின், அக்டோபர் மாதத்தில், மைசூர் ராஜ்யத்திற்கு வேட்டையாடச் செல்கிறாராம். மைசூர் காடுகளிலுள்ள மிருகங்கள், தங்கள் இராஜபக்தியைத் தெரிவித்துக் கொள்ள நல்ல சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது!

* * *

ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த மன்னர்பிரான் பிறந்த நாளும் வந்துபோய் விட்டது. இதில் ஏமாற்ற மடைந்தவர்கள் 1930-ம் வருஷம் ஜனவரிமாதம் முதல் தேதியை எதிர் பார்த்துக்கொண் டிருக்கிறார்களாம்.

* * *

அப்படியானால் காந்தி யடிகளுக்கும் இவர்களுக்கும் என்ன வித்தியாசம் என்று சந்தையில் சிலர் கேட்கின்றனர்? காந்தியடிகள் நூல் நூற்றுக் கொண்டே சுயராஜ்யத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். இவர்களோ அதிகாரவர்க்க உபாசனை செய்து பட்டத்தை எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறார். இருவரும் எதிர் பார்க்கும் தேதி ஒன்றுதான்.

* * *

'மகாலட்சுமியானவள் பாற்கடலிற்பிறந்து விஷ்ணுவின் மார்பில் உறைகின்றாள்' என்பது வெறுங்கதைதான். அவ்வாறு சொல்வது கவிகள் கற்பனைசெய்து கூறும் அதிசயோக்திகளேயாகும். நெசவுகாரனதுபாவே பாற்கடல்; நூலே ஆதிசேடன், நெய்தற்றொழிலே பாற்கடல் கடைதலாம் * * * முப்பத்து முக்கோடி தேவர்கள் என்கிறார்களே அவர்கள் யார்? அவர்கள் தேவாங்கர்களாகிய நம்மின் வேறல்லர்." இந்தியாவின் முப்பத்து மூன்று கோடிபேரும் இவ்வளவு சுலபமாக தேவர்களாகி விட்டதைக் குறித்து யாருக்குத்தான் மகிழ்ச்சியிராது?

* * *

"பிரிட்டிஷ் பார்லிமெண்ட் என்ன சீர்திருத்தம் கொடுக்கப்போகிற தென்பதைப் பற்றி யாரும் நினைக்கப் போவதில்லை" என்பது ஒரு தினசரிப்பத்திரிகை. ஆனால் மேற்படி விஷயத்தைப்பற்றிப் பேச்சும் எழுத்துமே பலமாயிருக்குமாம்.

* * *

ஒவ்வொரு மாதத்தின் கடைசி ஞாயிற்றுக்கிழமையில் இந்திய தேசியக் கொடியை வணங்க வேண்டுமென்று காங்கிரஸ் தீர்மானித்திருக்கிறது. சென்னையில் இது வரை ஒரே ஒருதரம் தான் இப்படிச் செய்யப்பட்டதென்று ஓர் அறிஞர் விசனிக்கிறார். ஆனால், சமுத்திரக் கரையில் தலைவர்களின் வீரப்பேச்சுகள், சமுத்திர அலையின் ஓசையைப் பங்கப்படுத்தி விட்டன வென்பதை இவருக்குத் தெரிவித்துச் சந்தோஷமடையுமாறு வேண்டுகிறோம்.

* * *

காலர், கழுத்துப் பட்டை அணிந்து கொள்வதால் பெண் தன்மை வந்துவிடுவதாக ஓர் ஐரோப்பிய வைத்தியர் கூறுகிறார். ஆண்தன்மை யில்லாவிட்டாலும் பெண் தன்மையாவது வரட்டுமே என்பது நமது நாகரிக இந்தியர்கள் நோக்கம்.

* * *

கல்வி வாசனை இல்லாத ஏழை ஜனங்கள் தங்கள் வருமானத்தில் முக்கால் பாகத்தைக் குடிப்பதற்கே செலவழித்து விடுவதாகப் படித்த சிலர் ஆராய்ச்சி செய்து முடிவு கட்டியிருக்கின்றனர். இதனால் படித்தவர்கள் தங்கள் வருமானத்தில் எவ்வளவு பாகத்தை காபி ஹோட்டல்களில் செலவழிக்கிறார்கள் என்று படியாத பாமர ஜனங்கள் ஆராய்ச்சி செய்யப் போகிறார்களாம்.

* * *

காஞ்சிபுரத்தில் வரதராஜ சுவாமியின் இரதம், ஆதிதிராவிடர்களின் உதவியினாலேயே தனது நிலைக்கு சேர்ந்ததாம். கடவுள் உதவி பெற்று மனிதர்கள் இருக்கிறார்களா அல்லது மனிதர் உதவி பெற்றுக் கடவுள் இயங்குகிறாரா என்பதைப் பற்றித் தங்களுக்கு இருந்த சந்தேகம் இந்தச் சம்பவத்தினால் தீர்ந்துவிட்டதாகப் பகுத்தறிவுள்ள அன்பர்கள் கொக்கரிக்கிறார்கள்.

* * *

"இராஜப் பிரதிநிதியின் செய்கையானது சட்டசபை காங்கிரஸ் வாதிகள் அந்தரங்க சுத்தியைச் சோதிப்பதாகவே இருக்கிறது" —ஒரு தினசரிப் பத்திரிகை. சென்னை மாகாணத்துச் சட்டசபை காங்கிரஸ் அங்கத்தினரில் பலர் "எக்ஸ்ரே" பரிசோதனைக் குட்படத் தாங்கள் சித்தமா யிருப்பதாக ஓர் அறிக்கை வெளியிடப் போகிறார்களாம்.

* * *

தான் சொன்னபடி கேளாத மனைவியை என்ன செய்யலாம் என்று ஒருநண்பர் கேட்கிறார். தமது விருப்பப்படி நடவாத கணவன்மார்களை என்ன செய்யலாம் என்று ஸ்திரீகள் பலரின் முறையீடு நமது செவிகளைத் துளைக்கின்றன வென்று அந்நண்பருக்குத் தெரிவிக்கிறோம்.

* * *

நியூயார்க்கின் சீதோஷ்ண ஸ்திதி தொண்ணூறு டிக்ரியா யிருக்கிறதென்றும், இந்த உஷ்ணம் தாங்க முடியாமல் இதுவரை இருபது பேர் இறந்து விட்டனர் என்றும் ஒரு செய்தி கூறுகிறது. நூறடிக்ரிக்கு மேல் உஷ்ணத்தினால் வருந்தும் சென்னை மாகாணவாசிகளில் பலர் நியூயார்க்குக்கு ஏன் குடியேறக் கூடாது என்று யோசித்துக் கொண்டிருக்கின்றனர்.

* * *

ஒருவீட்டு எஜமானர் "மிகுந்த அவசரமாக வரவேண்டும்" என்று டெலிபோன் மூலம் தெரிவித்து, டாக்டரை வரவழைத்தார். டாக்டரும் வேகமாக ஓடிவந்தார். அப்பொழுது வீட்டு எஜமானர், கையில் கடியாரத்தை வைத்துக் கொண்டு வாயிற் படியில் நின்று கொண்டிருந்தார். டாக்டர் வந்து "யாருக்கு என்ன உடம்பு?" என்று கேட்டார். வீட்டு எஜமானர் "இப்பொழுது ஒன்று மில்லை. என்மனைவிக்கு எப்பொழுதாவது திடீ ரென்று ஜுரம் வந்து விட்டால் நீங்கள் எவ்வளவு சீக்கிரத்தில் வரக்கூடும் என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவே வரவழைத்தேன். குறைந்தது ஐந்து நிமிஷம் ஆகும் என்று இந்தக் கடிகாரம் தெரிவிக்கிறது" என்று சொன்னார்.

* * *

கணவன்:—இன்று நமது வீட்டுக்கு ஒரு விருந்தாளி வந்திருக்கிறார்.

மனைவி:—நிரம்ப சந்தோஷம். நான்கூட, கமலம்மாள்வீட்டுக்கு விருந்தாளியாகச் செல்கிறேன்.

* * *

காதலன்:—முகத்திற்கு பவுடர்பூசிக்கொள்வது எனக்குப் பிடிக்கவில்லை. இயற்கை யழகுக்கு முன் செயற்கை யழகு எம்மாத்திரம்?

காதலி:—அப்படியானால் உங்களுடைய பொய்ப்பற்களை எடுத்து விடுவீர்களா?

* * *

ஒருவன்:—எனக்குத் தனிமையானஇடத்தில் ஒரு வீடு வேண்டும். சுமார் ஐந்து மைல் சுற்றுப்புறத்தில் ஒரு வீடு கூட இருக்கக் கூடாது.

வீடுத்தரகர்:—அப்படியானால் எளிய, இனிய வாழ்க்கையை நடத்த விரும்புகிறீர்களென்று நம்புகிறேன்.

ஒருவன்:-இல்லை; இல்லை. சங்கீதம் கற்றுக் கொள்ளவேண்டுமென்று விரும்புகிறேன்.

## அமானுல்லா பட்டந் துறந்ததேன்?

### அவர் கூறும் வரலாறு

ஆப்கானிஸ்தானத்து அரசர் பட்டத்தைத் துறந்து, இத்தலி செல்லும் நோக்கத்துடன், தமது பரிவார சகிதம் பம்பாய் வந்திருக்கும் காஜி அமானுல்லாகான், ஆப்கானி ஸ்தானத்துத் தற்போதைய நிலைமையைப் பற்றியும் அந்நிலைமை ஏற்பட்ட காரணத்தைப் பற்றியும், "அசோசியேடெட் பிரஸ்" பிரதிநிதியிடம் பின்வருமாறு கூறினார்:—

என்னுடைய துருப்புகள் தோற்கடிக்கப் பட்டதால், நான் ஆப்கானி ஸ்தானத்தை விட்டு வந்து விட்டேன் என்று எழுந்துள்ள வதந்தியை நான் பலமாக மறுக்கிறேன். அவ்வதந்திக்கு ஆதாரமேயில்லை. அந்தேரிகள், தாகர்கள், ஒட்டகர்கள், தோகிகள் முதலிய சமூகத்தினர்களுடைய துரோகச் செய்கையினாலேயே நான் வெற்றியடையமுடியவில்லை. ஷின்வாரிகள் கலகம் செய்ய ஆரம்பித்தது முதல், அக்கலகம் கிழக்கு, வடக்கு மாகாணங்களில் பரவும் வரையில், கலகக்காரர்களை அடக்க நான் துருப்புகளை அனுப்பவில்லை யென்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். அதற்கு மாறாக என்னுடைய பிரதிநிதிகளை அனுப்பி சமாதான முறையிலேயே காரியங்களை முடித்துவிட முயன்றேன். இக்கலகம் எழுந்ததற்குத் தகுந்த ஆதாரம் இல்லை. என்னுடைய கொள்கைகள் கலகக்காரர்களுக்குப் பிடிக்கவில்லை. அவை, அவர்களுடைய தர்மத்திற்கும் மதசம்பிரதாயத்திற்கும் விரோதமா யிருப்பதாக நினைத்தார்கள். தேசத்தின் எல்லாப் பாகங்களிலுமிருந்து வந்திருந்த சுமார் 1107 பிரதிநிதிகள் அடங்கிய ஒரு பெருங்கூட்டத்தில் இவ் விஷயங்கள் நன்றாக வாதஞ் செய்யப்பட்டன. ஒரு விதமான முடிவு செய்யப்பட்டது. ஆனால் என்னுடைய புத்திமதிகளும், எல்லாருக்கும் மன்னிப்புக் கொடுத்ததாக நான் வெளியிட்ட அறிக்கையும் எவ்வித பலனையும் உண்டாக்கவில்லை. முதலில் கலகத்தை ஆரம்பித்து விட்டவர்கள், பிறகு சமாதானமாகப் போனால், தங்களுடைய சூழ்ச்சிகள் வெளியாக்கப்பட்டு விடுமோ வென்ற பயத்திற்காகக் கலகத்தை நீடிக்கச் செய்தார்கள்.

### காந்தாரத்திற்கு வருகை

ஆதலின், இரத்தஞ் சிந்தல்கூடாதென்ற நோக்கத்துடன் பட்டத்தை என் சகோதரர் இனயதுல்லாகானிடம் ஒப்படைத்து விடுவதென்று தீர்மானித்தேன். என் சகோதரருக்கு ஆதரவு தேடும் பொருட்டு நான் காந்தாரத்திற்கு வந்தேன். ஆனால், காந்தார வாசிகள் வற்புறுத்தினமையாலும், தேசத்தின் நன்மையை உத்தேசித்தும் அரசாங்க நிருவாகத்தை மறுபடியும் நான் ஏற்றுக் கொண்டேன். கிழக்கு மாகாணங்களிலிருந்த பெரும் பாலார், தங்களுடைய பழைய செயலுக்காக வருந்தி, தங்களுடைய இராஜ பக்தியைத் தெரிவித்துக் கொண்டமையால், பாச்சோ சாகோவையும் அவர் கள்ளக் கூட்டத்தாரையும் எதிர்த்துப் போராட வேண்டியது அவசியமாயிற்று. காந்தாரத்திற்கும் காபூலுக்கும் நடுவேயுள்ள எல்லாச் சமூகத் தலைவர்களும், பாச்சா சாகோவைத் தொலைக்க வேண்டு மென்ற என் கொள்கையை ஆதரித்தார்கள். எனவே என் துருப்புகளைச் சேகரித்துக் கொண்டு, காபூல் மீது படையெடுக்கச் சித்தமாயினேன். சாகோவை முறியடிக்க என்னுடைய படைகள் போதுமானவையாகவே இருந்தன. ஏனென்றால், சாகோவினிடத்திலிருந்த துருப்புகளிற் பெரும்பாலன, என் தகப்பனார் காலத்திலும் என் காலத்திலும் ஊழியஞ் செய்தன. மேலும், பாச்சா சாகோவினிடத்திலிருந்த துருப்புகள், என்னிடத்தில் இராஜ விசுவாசமுள்ளவைகளா யிருக்கின்றன வென்றும், நான் படை யெடுத்து வந்தால், அவை, தங்களிடமுள்ள ஆயுதங்களை என்னிடம் ஒப்புவித்துவிடச் சித்தமா யிருக்கின்றன வென்றும் எனக்குத் தகவல்கள் கிடைத்தன. என் துருப்புகள், முக்கூருக்கு வந்து சேர்ந்தவுடன் அங்கே தங்கியிருந்த பாச்சா சாகோவின் துருப்புகள், தங்களுடைய ஆயுதங்களை ஒப்புக்கொடுத்து விட்டு, என்சார்பாக, சேனையின் முன்னணியில் நின்று போர் செய்ய வேண்டுமென்ற தங்கள் விருப்பத்தைத்தெரிவித்தன. காந்தாரத்திற்கும், கஜினிக்கும் இடையேயுள்ள சமூகத்தினரின் இராஜ விசுவாசத்தையும், உபசார வார்த்தைகளையும் நம்பியும் கஜினியில் சாகோவின் துருப்புகள் ஆயிரத்துக்கு மேலில்லை யென்பதை அறிந்தும், கஜினியை நோக்கி நான் படை யெடுத்துச் சென்றேன். ஆனால் நான் கஜினி சென்றதும், அந்தேரிகள், தாகர்கள் ஒட்டகர்கள், தோகிகள் இவர்களுக்குள் கலகம் ஆரம்பித்தது. எனவே, முக்கூருக்கே நான் பின்னடைய வேண்டியதாயிற்று. சமாதான முறையினால், மனத்தாங்கல்களைக் களைய முயன்றேன். ஆனால் இந்தக் கலகமானது கிலத் பிரதேசம் வரையில் பரவியிருந்தது. நல்ல வார்த்தைகள் கூறி, இக் குழப்பதை அடக்கலா மென்ற நோக்கத்துடன் கிலத்துக்கு வந்தேன். ஆனால் பயன் உண்டாகவில்லை. கில்ஸாய், துரானி சமூகத்தாரிடை இரத்தம் சிந்த வேண்டுமென்று நான் விரும்பவில்லை. நான், ஆட்சிமுறையை ஏற்றுக்கொள்வதற்காக, உள்நாட்டுக் கலகங்கள் நடை பெறுவதை நான் விரும்பவில்லை. இதனாலேயே, ஆப்கானிஸ்தான் அரசபதவியினின்றும் நான்விலக்கிக்கொண்டேன்.

### என்கொள்கை என்றும் நிலவும்

இதுவரையில், இந்தக் கலகத்தில், என் சேனைகளைத் தோற்கடிக்கக்கூடிய சேனைகளை நான் கண்டதே கிடையாது. சத்துருக்கள் என் சேனையைத் தோற்கடித்ததே இல்லை. ஒருபோதும், என் சேனை பின்வாங்கினதும் கிடையாது. இரத்தம் சிந்துதலில் எனக்குள்ள வெறுப்பே ஆப்கானிஸ்தானத்துச் சிம்மாசனத்தைத் துறக்கும்படி என்னைச் செய்தது. என் சொந்த நலத்திற்காக, ஆப்கானிய சமூகத்தார் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொள்ள வேண்டுமென்பது என் விருப்பமல்ல. நான் திடீரென்று இந்தியா வந்து சேர்ந்ததற்கு இதுவே காரணம்.

நான் வெற்றி யடையா விட்டாலும், என் கொள்கைகள் ஆப்கானி ஸ்தானத்தில் என்றும் நிலவும். சென்ற பத்து வருஷகாலமாக நான் எடுத்துக் கொண்ட பிரயாசை, முயற்சி இவைகள் ஆப்கானி ஸ்தானத்தின் மனோநிலையை மாற்றி விட்டன. இந்த மனோபாவம், ஆப்கானி ஸ்தானத்தை இதே நிலைமையில் எப்பொழுதும் வைத்திராது. தங்களுடைய சொந்த நலத்திற்காக, மதத்தை முன்னிட்டுக்கொண்டு, ஆப்கானி ஸ்தானத்தைத் தற்போதைய கேவல நிலைக்குச்கொண்டு வந்தவர்களிடமே ஆப்கானி ஸ்தானத்தை விட்டுவிட்டு வந்தேன். காபூலின் தற்போதைய நிலைமை எப்படியிருக்கிறதென்பது எல்லாருக்கும் தெரியும். அங்கே மதம் என்னும் பெயரால் என்னென்ன செய்யப்படுகிறதென்பதும் எனக்குத் தெரியும். இந்தச் சம்பவங்களுக்கெல்லாம் பின்னால், சுயநலமும் அறியாமையுமே தங்கியிருக்கிறதென்பது பிறகு நன்கு தெரியவரும். ஆப்கானி ஸ்தானத்துத் தற்போதைய நிலைமைக்கும் மதத்திற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை.

### பாச்சா - சாகோவின் அறிக்கை

பாச்சா - சாகோ, ஜெனரல் நாதர்கானுக்கும் அவர் சகோதரர்களுக்கும் எதிராகப் பிரசாரம் புரிந்து வருகிறார். அவர், நாதர்கானைத் துரோகி என்றும், இஸ்லாம் மதத்தின் விரோதி என்றும், அமீர் ஹபிபுல்லாகான் என்பாரைக் கொலை செய்தவ ரென்றும் கூறுகிறார். சாகோ என்னும் ஹபிபுல்லா, தாம் ஒருவர்தான் இஸ்லாம் மதத்தின் "உண்மை ஊழியனும், பாதுகாப்பவனுமாவன்" என்று கூறுகிறார். ஹபிபுல்லா தாம் வெளியிட்டுள்ள அறிக்கையில், நாதர்கானை உயிருடன் பிடித்து வருபவருக்கு ரூ. 40,000-மும் அவர் தலையைக் கொண்டு வருபவருக்கு ஒரு துப்பாக்கியுடன் ரூ. 10,000-மும், அவ்வண்ணமே அவர் சகோதரர்களை உயிருடனோ அல்லது பிணமாகவோ கொண்டு வருபவருக்கு ரூ. 10,000-மும் இனாமளிப்பதாகக் குறிப்பிட்டுள்ளார்.

### காபூலில் வெடிகுண்டு

பாச்சா சாகோ, சென்ற வாரம் காபூலுக்கருகில் சாமன்ஹசூரி என்னுமிடத்திலுள்ள தம் படைகளைப் பார்வையிட்டுக் கொண்டிருக்கும்போது, திடீரென்று பூமியில் புதைக்கப்பட்டிருந்த வெடிகுண்டு ஒன்று வெடித்தது. இதனால் ஒருவன் மரணமடைந்தான். பின்னர், புதைக்கப் பட்ட வெடி குண்டுகள் பல கண்டெடுக்கப் பட்டன. நாதர்கான், தம்மை அமீர் என்று கூறிக்கொள்கிறா ரென்றும், எனவே அவரிடம் போர்புரியத் தயாரா யிருக்கவேண்டுமென்றும் பாச்சா சாகோ, கோ-ஹி-டாமன என்னும் குடிகளுக்குப் பகிரங்கமாகத் தெரிவித்திருக்கிறார்.

காபூலிலுள்ள பயிர்களையும், பழங்களையும், வெட்டுக்கிளிகள் என்னும் பூச்சிகள் அழித்துவிட்டன என்று ஒரு செய்தி கூறுகிறது.

### நாதர்கான் அமீரா?

நாதர்கான், தாம்தான் ஆப்கானிஸ்தானத்து அமீர் என்று விளம்பரப்படுத்திக் கொண்டிருக்கிறார். இதற்கு நாதர்கான், அரசர் என்ற பொறுப்பில் தம்முடைய உத்தரவின்றி ஜிஹாத் (மதயுத்தம்) செய்யக் கூடாதென்று உலமாக்கள் விரும்புவதால், தாம் அரசர் என்று விளம்பரப்படுத்திக் கொண்டதாகவும், தனிபொறுப்பில் தமக்கு அத்தகைய விருப்பம் எதுவுமில்லை யென்றும் கூறியிருக்கிறார். சில வகுப்பினர் நாதர்கானுக்கு ஆதர வளிப்பதாகவும், நாதர்கான் சில வகுப்பினர் தலைவர்களின் ஆதரவைப் பெற முயல்வதாகவும் கூறப்படுகின்றன.

பம்பாயில் தங்கியிருக்கும் அமானுல்லா கடனுக்கு இந்திய தேசியக் காங்கரஸ் சார்பாக பண்டித் மோதிலால் நேரு அழகாக அலங்கரிக்கப்பட்ட ஒரு புஷ்பக் கூடையை அனுப்பினர். சௌரியா ராணியின் பிரசவக் காலத்தை முன்னிட்டு அவர் இதாலிக்குச் செல்லும் காலம் நிச்சயப்படவில்லை.



## தமிழ்ப் பெண்மணிகள்

### பி. ஸ்ரீ. எழுதியது

மொழிப்பற்றுள்ள மக்களே உலகின் கண் உயர் நிலையுடையாரென மதிக்கப்படுகின்றார். ஆங்கிலேயர் பிரான்சியர் ஆதிய மக்கள் தத்தம் மொழிகளிலுள்ள இலக்கியத்தை வளர்த்து அம்மொழிகளை வளமும் வனப்பு முறச்செய்வது கண்கூடு. இத்தகைய மொழிப்பற்றில் ஆண் மக்களைப் போல் பெண் மக்களும் முற்பட்டுழைக்கின்றார். ஐரோப்பிய அமெரிக்க நாடுகளிலும் ஜப்பானிலும் பெண் மக்கள் பலதுறைப்பட்ட ஆராய்ச்சி யறிவு வாய்ந்தவர்களாகக் காணப்படுகின்றார். மொழிவளர்ப்பினை ஓர் முக்கிய சாதனமாகக்கொண்டு கலைச் செல்வியரான பெண்மணிகள் தங்கள் நாடு மேலோங்கி நிற்கும் வண்ணம் பணியாற்றுகின்றார்.

பண்டை நாளில் நம் தமிழ்நாட்டிலும், இத்தகைய கலைச் செல்வியான பெண்மணிகள் காணப்பட்டனர். பெண்மையின் பெருமையால் பண்டைத் தமிழ்நாடு நாகரிக வாழ்வின் நிலைக்களனாகவும் சுதந்திர தேவியின் திருக்கோயிலாகவும் இலங்கியது. பெண்மையின் பெருமையே ஒரு நாட்டின் பெருமையினை உள்ளவாறு அளந்தறிவதற்குரிய ஓர் அருஞ்சாதனமாகும்.

பண்டைத் தமிழர், மனிதரை இருவகுப்பினராகப் பிரித்தார். நாற்பாற் குலமென்னும் வருணாச்சிரம தருமம் பண்டைத் தமிழர் கொள்கையன்று. அறிவுள்ளவர், அறிவு பெறாதவர் என்னும் இருபெரும் பிரிவுகளையே தமிழறிஞர் அறிந்திருந்தார். பகுத்தறிவுள்ளவர் மக்கள்; பகுத்தறிவு பெறாதவர் மக்கள் வடிவங் கொண்டிருந்த போதிலும் மாக்களே யாவர். "மக்கள் தாமே ஆறறிவுயிரே" என்றும் "மாவும் மாக்களும் ஐயறிவினவே" என்றும் தொல்காப்பியர் கூறியுள்ளார். பகுத்தறிவு பெற்ற மக்களே மக்களென்பதும் பகுத்தறிவு அல்லது மனவுணர்ச்சி பெறாது புலனுணர்வு மட்டில் பெற்ற மனிதர் மிருகங்களைப் போல் மாக்களாகவே மதிக்கத்தக்கவர் என்பதும் தொல்காப்பியனார்கொள்கை. அறிவுள்ளவர் உயர்ந்த சாதி, அறிவில்லாதவர்களும் மிருகங்களும் தாழ்ந்தசாதி என்பது கருத்து. அறிவு வேற்றுமை ஒன்றே பண்டைத் தமிழர் அறிந்தது; சாதி வேற்றுமை அன்னார் அறியாதது. இத்தகைய பெருங் கொள்கை கொண்ட தமிழர் அவயவ வேற்றுமை மாத்திரங் கருதிப் பெண்மக்களைத் தாழ்த்த ஒருப்பட்டாரில்லை.

பிற்காலத்தார் நாற்பாற் குலமென்னும் சாதி வேற்றுமை கற்பித்துப் பிறப்பால் உயர்வு தாழ்வு கூறியதோடு பொதுவாகப் பெண் மக்களைப் பெரிதும் தாழ்த்திவிட்டார். அறிவுச் செல்வம் இருபாலர்க்கும் இன்றி யமையாத தென்பது தமிழர் கொள்கை. குலமும் கோத்திரமும் கருதாது காதல் மணம் நடாத்திய பண்டை மக்கள் காதலர்க் குரிய பொருத்தம் கூறுமிடத்து, ஒத்த தலைவனும் தலைவியும் என்று கூறிப்போந்தார். தலைவனுக்கும் தலைவிக்கும் எத்தகைய ஒற்றுமை வேண்டும்? முதற்கண் கருத் தொருமித்த காதல் வேண்டும். மனம் ஒன்றி நிற்பதே மணத்திற்கு முதற்காரண மாயிற்று.

### பெண்மைக்கு ஆண்மை வேண்டும்

இத்தகைய காதலர், காதலில் ஒத்திருந்ததுபோல் ஆண்மையிலும் அறிவிலும் ஒத்திருத்தல் வேண்டும். பண்டைத்தமிழர், பெண்மைக்கு ஆண்மையும் அறிவும் வேண்டுமென்று கருதினர். பெண்மைக்கு ஆண்மை வேண்டுமாம். என்ன ஆச்சரியம் பாருங்கள்! இது தமிழர் வீரவாழ்க்கைக்கு ஓர் அரும் பெருஞ் சான்றாகுமன்றோ? வீரம் வேண்டும், அறிவு வேண்டும்; இஃது வாழும் முறைமை என்று கருதிய நம்முன்னோர், வீரமும் அறிவும் இருபாலர்க்கும் இன்றி யமையாதெனக் கருதினர். பெண்மையை அன்னார் இழிவுசெய்யவில்லை யென்பதற்கு இது ஓர் சான்றன்றோ? பெண்மைக்கு அடக்கம் வேண்டும் நிறைவு வேண்டும் செம்மை வேண்டும் வீரம் வேண்டும் அறிவு வேண்டும் என்று நம் முன்னோர் கருதுவாராயினர்.

## பெண்ணினம்

பெண்மையைத் தாழ்த்தும் வழக்கம் சைனர் காலத்திற்குப் பின்னரே நமது நாட்டில் புகுந்தது. பரிமேலழகர் காலத்தில் மாதரை இழிவு செய்யும் கொடுமை பின்னும் அதிகரித்தது. இடைக்கால வடநூலார் கொள்கை சைனர் கொள்கையோடு கலந்து நாட்டிற்குப் பெருங்கேடு விளைத்தது. பெண்களை வெறுத்த வேதாந்திகளின் கொள்கையும் பெண்மையின் வீழ்ச்சிக்குக் காரண மாயிற்று.

"பெண்ணெனப் படுவ கேண்மோ
பீடில பிறப்பு நோக்கா
உள்நிறை யுடைய வல்ல
ஓராயிர மனத்த வாகும்
எண்ணிப் பத்து அங்கையிட்டால்
இந்திரன் மகளுமாங்கே
வெண்ணெய்க் குன்றெரி யுற்றாற்போல்
மெலிந்து பின்னிற்குமன்றே"

என்பது சைனர் கொள்கை.

பெண்மை யென்னும் சொற்பொருள்களில் ஒன்று பெருமை யென்பது. இச் சொற்பொருளையே சைனர் மறுக்கத்துணிந்தார். பெண்மைக்குப் 'பீடு' (பெருமை) இல்லையாம். பெண்மை பிறப்பு நோக்குவதில்லையாம். உள்ளத்தில் நிறை யில்லையாம். பெண்மைக்கு நிறையுண் டென்னும் தொல்காப்பியர் கொள்கையைச் சைனர் மறுக்கத்துணிந்தார். ஓராயிர மனத்தவாகும்! என்ன அநியாயம், பாருங்கள். பெண்ணுக்கு ஒரு மனமில்லை; ஆயிர மனமுண்டு என்று கூறும் ஆண்மையைப் பாருங்கள்! கம்பர் தமது இராமராஜ்ய வருணனையில் "வேசையருள்ளமும் ஒரு வழி ஓட" என்று கூறி இக்கொள்கையை மறுப்பது காண்க.

"எண்ணிப் பத்து அங்கை யிட்டால்
இந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க் குன்றெரி யுற்றாற்போல்
மெலிந்து பின் நிற்குமன்றே"

என்னும் மொழிகளில் பெண்மை எவ்வளவு அநியாயமாக இழிவுசெய்யப்படுகின்றது! 'பத்துக்கு மிஞ்சிய பதிவிரதையில்லை' யென்னும் பாழுங்கொள்கையைத் தோற்றுவித்த பாவடிகளன்றோ, மேலே காட்டப் பெற்றுள்ளன!

### வடமொழியாளரும் பெண்மையும்

பெண்கள் இயற்கையாகத் துஷ்ட புத்தி வாய்ந்தவர் என்னும் கொள்கை வான்மீக ராமாயணத்திலும் காணப்படுகின்றது. வடமொழிக் காவியங்களை முன் மாதிரியாகக் கொண்டு தமிழ்க் காவியம் செய்யப்புகுந்த சிந்தாமணி ஆசிரியர் வடமொழியாளர் பெண்மையைப் பழித்துக் கூறும் கொள்கையினையும் தழுவிக் கொண்டனர் என்பது கண்கூடு. இக்கொள்கை பிற்காலத் தமிழ் நாட்டைப் பிடித்துப் பேயாட்ட மாட்டத் தொடங்கியது.

"நுண்ணறி வுடையோர்
நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது
பெரும் பேதைமைத்தே"

என்பது பிற்காலத் தமிழ் மக்கள் கொள்கையாயிற்று. இதனாலன்றோ 'நளவெண்பா' என்னும் அரும்பெறல் மணியை நமக்கு அளித்துள்ள புகழேந்திப் புலவரும் "மாளிகை மேல் காரிகையார் கண்ணே விலங்குவன மெய்ந்நெறியை விட்டு" என்று கூறிப் போந்தார். புகழேந்திப் புலவர் நள மன்னனது தலைநகரை ஓர்'ஞானக் கலைவாழ் நக'ராக வருணித்துள்ளார். 'ஞானக்கலைவாழ் நகர'த்தில் பெண்மை மட்டும் இழிவு செய்யப் பெறுகின்றது! ஞானப் பெண்மையன்றோ ஞானக் கலைவாழ் நகரத்தின் அடிப்படையாக அமைதல் வேண்டும்? நமது கவிச் செல்வரான புகழேந்தி அஸ்திவாரமில்லாது கட்டடம் அமைக்கும் சிற்பியாகின்றார். நளவெண்பா வென்னும் அற்புத மாளிகையின் முதற் பகுதி இவ்வாறு அமைந்திருப்பது ஓர் அரிய விசித்திர வேலைப் பாடமைந்த கட்டடத்தில் ஏற்படும் ஓர் பெருங்குறையாகவே ஆராய்ச்சியாளரான ரசிகர்களால் மதிக்கப்படும். புகழேந்தி என் செய்வார் பாவம்! அவர் காலத்தில் பெண்மை யிழிவு செய்யப் பெற்றது. தன் காலத் தமிழ் நாட்டையே அவர் தமது நூலின் முகப்பிலே பிரதிபலித்துக் காட்டுகின்றார்!

காலத்தின் கருவியாக அமைந்து காவியங்கட்டுவோர் மகா கவிகளல்லர். காலத்தையும் தம் கையில் கருவியாகக் கொண்டு தம் பேரறிவின் போக்கிற்கிணங்கக் காவியங் கட்டுவோரே மகா கவிகளாவர். சிந்தாமணி ஆசிரியருக்குப் பின்னும் புகழேந்திப் புலவர்க்கு முன்னும் வாழ்ந்த கம்பர் தம் காவிய முகப்பில் பெண்மையின் பெருமையினை வற்புறுத்தினார். அப்பெருமையினையே அவர் தமது காவிய மாளிகையின் அஸ்திவாரக் கல்லாக அமைத்துள்ளார். மாதரார் "கண்ணெனும் பூசலம்பும் நெறியின் புறஞ் செலாக்கோசலம்" என்று கம்பர் கூறுவதோடு, "மாளிகை மேல் காரிகையார் கண்ணே விலங்குவன மெய்ந்நெறியை விட்டு" என்று புகழேந்தி கூறுவதை ஒப்பிட்டு உண்மை யுணர்க.

சிந்தாமணி ஆசிரியரும் புகழேந்திப் புலவரும் தங்கள் காலத்துப் பெண்மையின் சிறுமையினை வெளியிடுகின்றனர். கம்பரோ பண்டைத் தமிழ்ப் பெண்மணிகளின் பெருமையை வெளியிடுகின்றார்.

"எண்ணிப் பத்தங்கை யிட்டால்
இந்திரன் மகளுமாங்கே
வெண்ணெய்க் குன்றெரி யுற்றாற்போல்
மெலிந்து பின்னிற்குமன்றே"

என்னும் கொள்கையை மறுப்பதன்றோ, கம்பராமாயணம்!

"தேவர் தேவியர் சேவடிகை தொழும்
தாவில் மூவுலகின் தனி நாயகம்
மேவுகின்றது நின் கண் விலக்கினை
யாவர் ஏழையர் நின்னின் இலங்கிழாய்"

என்று சீதையை நோக்கி இராவணன் கூறுகின்றான். மூவுலகின் தனி நாயகத்தையும் விலக்கி ஒழுக்கத்தை நிலைநிறுத்தும் பெண்மையன்றோ கம்பர் சித்திரிக்கும் பெண்மை! சீதையின் குணநிசயத்தில் கம்பர் பண்டைக் காலத் தமிழ்ப் பெண்மணிகளின் குணநிசயத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

### பெண்மையும் பண்டைத் தமிழகமும்

பெண் மக்கள் ஆண் மக்களைப் போல் வீரத்திலும் அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்து விளங்குதல்கூடும். சில இயற்கை வேற்றுமை காணப்பட்ட போதிலும் வீரமும், அறிவும் ஒழுக்கமும் இருபாலர்க்கும் உரியனவே. இஃது பண்டைத் தமிழகம் கண்ட உண்மை. சங்க காலத்தில் பெண் மக்களிலும் பெரும் புலவரிருந்தனர். சைவவைணவ மெய்யடியார் காலத்திலும், ஆண்டாள், காரைக்காலம்மையார் போன்ற பெண் மணிகளைக் காண்கின்றோம்.

ஓர் சங்கப்புலவர் நரைக்கு ஒரு மருந்து கூறுகின்றார். முதற்கண் மனைவியும் மக்களும் அறிவு நிரம்பி யிருத்தல் வேண்டும் என்பது அம்மருந்தாகும். மக்கள் அறிவு நிரம்புவதற்குக் கல்லூரி ஆசிரியர்களைப் பார்க்கிலும் அதிக அளவில் உபகரிப்பவர் அன்னையரேயன்றோ? எனவே மனைவியர் அறிவே நரைக்கு மருந்தெனக் கருதத்தக்கது. எனினும் பிற்காலத்தார் பெண்களுக்கு அறிவு உரியதன்றெனக் கருதுவாராயினர்! 'கலைமலி காரிகை' என்று மணிக்கோவைகாசாரும் 'கலை வலார்' என்று சிந்தாமணி ஆசிரியரும் பெண் மக்கள் கல்வித்திறத்தினைச் சிறப்பித்துக் கூறியுள்ளார். அடியார்கள் காலத்தில் பெண்மையின் பெருமை குறையவில்லை யென்பது முன்னமே குறிக்கப்பட்டது. சிந்தாமணி ஆசிரியர் காலத்தில் பெண்மை ஒழுக்க விஷயத்தில் பெரிதும் இழிவாகக் கூறப்பட்ட போதிலும் அறிவுத்துறையில் சிறப்பித்துக் கூறப்படுகிற தென்பதை கவனிக்கத் தக்கது. எனினும் உரையாசிரியர்கள் தங்கள் காலத்திலிருந்த நிலையினை மனத்திற் கொண்டு, திருக்கோவையாரிலும், சிந்தாமணியிலும் உபயோகிக்கப் பெற்றுள்ள 'கலை' என்னும் சொல்லிற்கு ஓர் விசேஷமான பொருள் கூறுகின்றார். பெண்கள் எல்லாக் கலைகளுக்கும் உரியரல்லர்; இசை ஓவியம் முதலிய சில அழகுக் கலைகளுக்கே உரியர் என்பது உரையாசிரியர் கொள்கை.

பண்டைத் தமிழ்நாட்டில் சங்க நூல்களின் வாயிலாகக் காட்சி யளிக்கும் நல்லிசைப் புலவருள், மெல்லியலார் பலராவர். சாதிவேற்றுமை கருதாத சங்கமிருந்து தமிழாராய்ந்த பெரும் புலவருள் பெண்மக்களும் காணப்பட்டனரெனின், பண்டைத் தமிழ் நாகரிகத்தின் பெருமையினை என்னென்று போற்றுவது! ஔவையார் என்னும் பெயரினை அறியாதார் யார்?

தமிழ்ப் பொதுமக்களின் உள்ளமன்றோ ஔவையாக வடிவுகொண்டு உலவியது! ஆண்டாளையும், காரைக்காலம்மையாரையும் அறியாதார் யார்? தமிழ் மக்களது பக்திப் பெருங்காதலன்றோ இவ்விரு பெண்மணிகளாகவும் வடிவெடுத்து வந்தது! ஆதி மந்தியார், வெள்ளி வீதியார் ஆதிய நல்லிசைப் புலமை வாய்ந்த பெண்மணிகளின் பெயர்கள் பல, சங்கநூல்களில் காணப்படுகின்றன. பண்டைநாளில் அரசர்களைப் போல் அவர்கள் தேவிமார்களும் பெரும் புலவராகத் திகழ்ந்தனர். குறமகளும், காவற் பெண்டும் நல்லிசைப் புலமை வாய்ந்தவராக விளங்கிய சங்க காலத்தின் பெருமை நமது பெருவியப்பிற்கு உரியதாவதோடு, தற்காலச் சிறுமையினை நமக்கு நன்கு எடுத்துக் காட்டுவதற்கும் உதவுமென்பது எமது கருத்து.

## காந்தியடிகளின் ஆந்திர தேசத்துப் பிரயாணம்

### காங்கிரஸ் காரர்களுக்குச் சில யோசனைகள்

மகாத்மா காந்தி சென்ற வாரத்து "யங்இந்தியா" பத்திரிகையில் வரைந்துள்ள ஒரு கட்டுரையின் சில குறிப்புகளை எடுத்துக் கீழே தருகிறோம்:—

### நகரும் மேடை

நான் 'நகரும் மேடை' யைக்கண்டு பிடித்திருக்கிறேன். என்புத்திசாலித்தனத்தினால் இதை நான் கண்டுபிடிக்கவில்லை, அவசியத்தை உத்தேசித்து இதைக்கண்டு பிடித்தேன். என் தேகம் பலஹீன தேகமாதலால் அடிக்கடி எழுந்திருக்கவும் உட்காரவும் என்னால் முடியவில்லை. மோடார் வண்டிகளின் மீது ஏறிக்கொண்டு செல்வதும், அவ்வண்டியை ஜன நெருக்கடியில் தள்ளிக்கொண்டு போவதும், பிரசங்கம் செய்ய மேடைகளின் மீது ஏறுவதும் மறுபடியும் இறங்குவதும், மீண்டும் மோடார்வண்டியின் மீது ஏறிக்கொண்டு ஜனங்களைத் தள்ளிக் கொண்டு செல்வதும், இதே மாதிரி அடிக்கடி செய்வதும் மிகவும் கஷ்டமா யிருக்கிறது. ஆதலின் ஆந்திர தேசத்தில் நான் சுற்றுப்பிரயாணஞ் செய்தபோது, நான் ஏறிவந்த மோட்டார் வண்டியைக் கூட்டத்தின் நடுவில் கொண்டு வரச் செய்து, அதையே பிரசங்க மேடையாக உபயோகித்துக் கொண்டேன். இதனால், பணச் செலவு குறைவுபட்டது; தேகசிரமம் குறைந்தது; காலம் வீணாகாமலிருந்தது. பிரசங்க மேடைக்கும், நாற்காலிகளுக்கும், அலங்காரங்களுக்கும் அவசிய மில்லை. ஜனங்களின் பரிசுத்தமான இருதயமே அலங்காரமாக விளங்கியது. இம்முறை, இனி எல்லாக் கூட்டங்களிலும் அனுசரிக்கப்பட்டால் நல்லதென்று நான் கூறுவேன்.

### கதர் தரித்த நாவிதர்

பொதுவாக, எனக்கு நானே க்ஷவரஞ் செய்து கொள்கிறேன். இம்முறை, அதாவது நான் ஆந்திர தேசத்தில் சுற்றுப் பிரயாணஞ் செய்து கொண்டிருந்த போது ஸ்ரீ மகன் லால் காந்தி வைத்துப் போயிருந்த ஒரு கத்தியை உபயோகித்துக் கொண்டேன், சரியாக மட்டும் அதை உபயோகித்து வந்தால் அது நல்ல ஆயுதந்தான். ஆனால் அதை சாணைக்கல்லில் தீட்டுவது முதலியவை எனக்குச் சரியாகத் தெரியாது. ஆதலால், எனது சுற்றுப் பிரயாண ஆரம்பத்தில், கதர் தரித்த ஒரு நாவிதர் வேண்டு மென்று தெரிவித்தேன். ஆந்திரதேசத்தில் கதர் தரித்தநாவிதர்கள் அகப்படுவது மிகச்சுலபம். நன்றாகக்ஷவரம் செய்து கொண்டேன். அந்நியத்துணி பகிஷ்காரக் கமிட்டியின் தலைவனான எனக்கு, கதர் தரித்த நாவிதர் அகப்பட்டதனால், சரியான பிரசாரத்திற்குச்சந்தர்ப்பம் ஏற்பட்டதென்று கண்டு கொண்டேன். நாவிதர்களைவிட சரியான பிரசாரகர்கள் அகப்படமாட்டார்கள். ஆதலின் அத்தகைய நாவிதர்களுக்குத் தரித்திர நாராயணனைப் பற்றித் தெரிவிக்கச் சந்தர்ப்பம் வாய்த்ததைக் குறித்து மகிழ்ந்தேன். ஆனால் என் கருவிகளை நாவிதரிடம் கொடுத்து, நான் க்ஷவரம் செய்துகொண்டால் சுதேசியத்தைப் பற்றி நன்றாகத் தெரிவிக்க முடியாதென்று அறிந்தேன். எனவே, அடுத்த முறை, அந்த நாவிதருடைய கருவிகளையே கொண்டு க்ஷவரம் செய்து கொண்டேன். முதலில் ஆயுதங்களை நீர் விட்டுக் கழுவிச் சுத்தம் செய்து கொள்ள வேண்டுமென்று தெரிவித்தேன். மற்றோரிடத்தில் கதர் தரித்த ஒரு நாவிதர் எனக்கு க்ஷவரம் செய்யக் கொண்டுவரப் பட்டார். இவர் வைத்திருந்த எல்லாச் சாமான்களும் மேனாட்டில் உற்பத்தி செய்யப்பட்டனவே. இவை யாவும் என்னை வரவேற்ற அன்பருக்குச் சொந்தமானவை என்ற சந்தேகம் எனக்குண்டு. ஆதலின் க்ஷவரம் செய்ய வரும் நாவிதர்கள் சுதேசி சாமான்களையே உபயோகிக்கிறவர்களாய் இருக்கிறார்களா வென்று நான் பார்த்துக்

## தீண்டாமை ஒழித்தல்

### பண்டித மாளவியா, சேத் பஜாஜ் இவர்களின் வேண்டுகோள்

பண்டித மதன் மோகன மாளவியா, சேத் யமுனுலால் பஜாஜ் ஆகிய இருவரும் பின் கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்கள் :—

தீண்டாமையையொழிக்கும் வேலையை பண்டித மதன் மோகன மாளவியா, சேத் யமுனுலால் பஜாஜ் இவர்களடங்கிய ஒரு கமிட்டியினிடம், காங்கரஸ் காரியக் கூட்டம் ஒப்படைத்திருக்கிறது. சென்ற பல வருஷங்களாக தீண்டாமை ஒழிவுக்காக எவ்வளவோ வேலைகள் செய்யப்பட்ட போதிலும், இன்னும் தீண்டாதாரின் கஷ்டங்களைப் போக்கப் பல வேலைகள் செய்ய வேண்டியிருக்கின்றன. ஆதலின், இந்தியாவிலுள்ள ஆண் பெண் அனைவரும் இக்களங்கத்தை ஒழிக்க, மேற்படி கமிட்டியுடன் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள். கீழ்க்கண்ட முறைகளை அநுசரித்தல் நல்லதென்று இக்கமிட்டியார் அபிப்பிராயப்படுகின்றனர் :—

(1) கோயில் நிருவாகிகளிடம் சென்று கேட்டுக் கொண்டும், கோயிலுக்கு வரும் பக்தர்களை அணுகி அவர்களிடத்தில் பிரசாரஞ் செய்தும், வேறு பல அவசியமான வேலைகளைச் செய்தும், தீண்டாதாரைக் கோயில்களுக்குள் பிரவேசிக்கச் செய்தல்.

(2) பொதுக் கிணறுகளைத் தீண்டாதாரின் உபயோகத்திற்கு விடுதல்.

(3) பொதுப் பள்ளிக்கூடங்களை, எவ்வித வேற்றுமையுமின்றித் தீண்டாதார் பிள்ளைகளுக்கு அநுமதித்தல்.

(4) தீண்டாதாருக்குச் சுகாதாரவசதி யுள்ள வாசஸ்தலங்களை அமைத்துக் கொடுத்தல்.

(5) சுகாதாரம் முதலியவைகளைப் பற்றித் தீண்டாதாரிடைப் பிரசாரஞ் செய்தல்.

(6) கோமாமிசம், மதுபானம் இவைகளை உபயோகிக்காதபடி தீண்டாதாரைவிலக்கல்.

மேற்படி கமிட்டியார் செய்யும் முயற்சிகளில் ஒவ்வொரு ஹிந்துவும் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறார். யாரேனும் ஏதேனும் யோசனை சொல்ல விரும்பின் "சேத் யமுனுலால் பஜாஜ், தீண்டாமை ஒழிவு சப்கமிட்டி, 395, கல்பாதேவிரோட், பம்பாய்" என்றவிலாசத்திற்கு எழுதவும்.

---

கொள்ளவேண்டும். காங்கிரஸ்காரர்கள், சுதேசியத்தைப்பற்றித் தங்களிடத்தில் வேலை செய்யும் நாவிதர், வண்ணார் முதலியோரிடத்தில் பிரசாரஞ் செய்யவேண்டும். நாம்கவனிக்கத் தகுந்தவரல்லர் என்று அவர்களை நாம் அலட்சியம் செய்து விடக்கூடாது. நம்மிற் சிறந்த பலரைப்போல் இவர்களுடைய தொண்டும் நமக்கு இன்றியமையாததே.

### உண்மையான சுதேசியம் எது?

கதரை நாம் உடுத்திக்கொண்டு விட்டால், சுதேசியத்தை நாம் பூரணமாக அநுசரித்து விட்டோம் என்று நம்மில் பலர் நினைக்கின்றனர். மேனாட்டு நாகரிக சம்பந்தமான எல்லாச் சாமான்களையும் உபயோகிப்பதற்கு இக்கதரை ஒருசோபானமாகக்கொள்கிறோம். இது சுதேசியத்திற்கு முரண்பட்டதாகும்; கதரின் உண்மைத்தத்துவத்தை மறுப்பதாகும். இந்தியர்கள், எப்பொழுதும் கதரையே உபயோகிக்க வேண்டுமென்பது எவ்வளவு அவசியமோ அப்படியே, சுதேசி சாமான்களையே, அவை மட்டமாக இருந்த போதிலும், உபயோகிக்கவேண்டியதும் அவசியமாகும். போதிய ஆதரவின்மையால், பல சுதேசி சாமான்கள் அழிந்து போகுந்தறுவாயில் இருக்கின்றன. சுதேசி சாமான்கள் மிகச் சிறந்தனவாக இல்லாமல் இருக்கலாம். அவைகளை நாம் சரியாகக் கவனித்து, போதிய ஆதரவு கொடுப்பதன் மூலம் அவைகளைச் சீர்திருத்த வேண்டும். சிறப்பும் நயமும் உள்ள சாமானையே வாங்க வேண்டு மென்பது அவசியமில்லை. நமது தேசத்தை விட நல்ல சீதோஷ்ண ஸ்திதியுள்ள தேசமிருந்தால் நமது தேசத்தை நாம் விட்டு விடுகிறோமில்லை. ஆனால் நமது தேசத்தை விருத்தி செய்யவே நாம் பாடுபடுகிறோம். அதுபோலவே அந்நியதேசத்துச் சாமான்கள் அழகாயும் நயமாயும் இருக்கின்றன வென்ற காரணத்திற்காக சுதேசிச் சாமான்களை நிராதரவு செய்யக் கூடாது. தன் மனைவியை விடுத்து அழகிய ஒரு ஸ்திரீயிடம் செல்ல விரும்பும் ஓர் ஆடவன், தன் மனைவிக்கு எப்படி விசுவாசகாதகனாகிறானோ அப்படியேபோல், தன்நாட்டில் உற்பத்தி செய்யப்படும் சாமான்களைப் புறக்கணித்து அந்நியநாட்டுச் சாமான்களை உபயோகிக்கிறவன், தன்தேசத்திற்கு அவிசுவாசியாகிறான். ஒரு நாடு முன்னேற்ற மடைய வேண்டுமானால் அந்நாட்டு மக்கள் சுதேசிச் சாமான்களை உபயோகிப்பது மிகவும் அவசியமாகும்.

## தொழிலாளர் இயக்கம்

### பம்பாய் வேலை நிறுத்தம்

தற்போது பம்பாயில் வேலைநிறுத்த நிலை மும்முரமாகவே யிருந்துவருகிறது. வேலை நிறுத்தக்காரர்கள் மில்வாயிலில் நின்றுகொண்டு மறியல்செய்து கொண்டிருக்கிறார்கள். சிலதொழிலாளர்களை கிராமங்களுக்கு அனுப்பும் வேலையும் நடைபெற்று வருகிறது. 29-5-29ல் ஏப்ரல் மாதச் சம்பளம் கொடுக்கப்பட்ட பின்னர், தொழிலாளர்களில் சுமார் 8000 பேர் மீண்டும் வேலைக்குச் செல்லவில்லை.

ஏப்ரல் மாத சம்பளத்தைப் பெறுவதற்கே, தொழிலாளர்களில் பலர் முன்னர் வேலைக்குச் சென்றதாகத் தெரிகிறது.

இன்னும் 3-6-29ல் சம்பளம் பெறப் போகும் தொழிலாளர்களும் வேலை நிறுத்தத்தில் கலந்து கொள்வார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது. வேலை நிறுத்தம் அமைதியாகவே நடைபெற்று வருகிறது. கிராமங்களுக்குச் செல்பவர்களின் தொகையும் அதிகரித்து வருகிறது. 15 மில்களுக்குக் குறையாமல் மூடிக்கிடக்கின்றன. வேலை நடைபெறும் ஏனைய மில்களில் போதிய அளவு தொழிலாளர்கள் வேலை செய்யவில்லை.

### கல்கத்தா வண்டிக்காரர் வேலை நிறுத்தம்

ஹௌரா கூட்ஸ் ஷெட்டிலிருக்கும் சாமான் ஏற்றிச் செல்லும் சுமார் 2000 வண்டிக்காரர்கள் வேலை நிறுத்தஞ் செய்திருக்கின்றார்கள். கூட்ஸ் கொட்டகையின் காவல் அதிகாரிகளில் இருவர் அவ்வண்டிக்காரர்களை அவமானப்படுத்தியதே காரணமாம். அவ்விரு அதிகாரிகளையும் நீக்கும் வரை வண்டிக்காரர்கள் வேலை நிறுத்தத்தை விடாது நடத்தி வருவர் என்று கூறப்படுகிறது. பின்னர் கிடைத்த செய்தியில், அதிகாரிகள் வண்டிக்காரர்களுடைய குறையை விசாரிப்பதாகக் கூறியதன்மேல் அவர்கள் வேலை நிறுத்தத்தை முடித்துவிட்டு வேலை செய்து வருகின்றார்கள்.

### பெங்களூர் தொழிலாளர் நிலை

மகாராஜா மில், மினர்வாமில் இவைகளைச் சேர்ந்த தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் இன்னும் சில நாட்கள்வரை நீடிக்கும் என்று கருதப்படுகிறது. வேலை நிறுத்தம் செய்துள்ள தொழிலாளர்களில் சுமார் இரண்டாயிரம் பேர் ஊரை விட்டே வெளியிடங்களுக்குச் சென்று விட்டனர். இன்னும் பலர் போய்க்கொண்டே யிருக்கின்றனர். வேலை நிறுத்தம் செய்துள்ள தொழிலாளர்களிடம் அநுதாபங்காட்ட மற்ற மில் தொழிலாளர்கள் 1-6-29 ல் ஓர் ஊர் வலம் நடத்தினார்கள். பெங்களூர் மாஜிஸ்டிரேட் ஊர்வலம் நடத்தக் கூடாதென்று தடை யுத்தரவு செய்தும், தொழிலாளர்கள் அமைதியான முறையில் ஊர்வலம் நடத்திவரும் போது, நடுவழியில் ஆயுதந் தாங்கிய சிபாய்கள் குறுக்கே நின்று ஊர்வலத்தைத் தடுத்தார்கள். அவ்வமயம் தொழிலாளர் சத்தியாக்கிரகத்தைக் கைக் கொண்டனர். பின்னர் ஊர்வலம் சிப்பாய்களின் காவலுடன் தொழிலாளர் சங்கம் வாயிலில் சென்று உடனே அமைதியாகக் கலைந்தது.

### ஜேம் ஷெட்பூர் வேலை நிறுத்தம்

கோல்முரிதகரத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து இரண்டு மாதங்களாகின்றன. அது இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை. நிர்வாகிகள் தொழிலாளர்கள் இயக்கத்தை ஒழிப்பதிலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பதால், சமீபத்தில் சமரசம் ஏற்படுவதற் குரிய வழி ஒன்றுங் காணப்படவில்லை என்று தெரிகிறது. சமரசம் ஏற்படும் வரை தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தை அமைதியுடனும் உறுதியுடனும் நடத்தி வரவேண்டுமென்று தீர்மானித்திருக்கின்றார்கள்.

### ஆமதாபாத்தில் வேலை நிறுத்தம்

1-6-29ல் திடீரென்று பைன் நிட்டிங்மில், அம்பிகாமில் ஆகிய இரண்டு மில்களிலும் நூல் நூற்கும் பிரிவுகளிலுள்ள தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்து விட்டனர். இதற்குக்காரணம் ஒருநாள் கூலி தர்மதமாகக் கொடுக்கப்பட்டதேயாகும்.

### மீரத் சதியாலோசனை வழக்கு

மீரத் சதியாலோசனை வழக்கில் சம்பந்தப்பட்ட ஸ்ரீமான் கேதர்நாத் ஸைகால் என்பார் மீது ஏற்கனவே இ. பி. கோ. 124-ஏ. பிரிவுப்படி சாட்டப்பட்டுள்ள இரண்டு குற்றங்களுக்கு, ஹோஷியார்பூர் அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட் இரண்டாண்டும், ஓராண்டும் கடுங்காவல் தண்டனை விதித்தார். இவ்வழக்கிற்காக மீரத் சிறையிலிருந்து இங்குக் கொண்டு வரப்பட்டார்.

மீரத் சதியாலோசனை வழக்கின் விசாரணையைநடத்த பிரத்தியேக மாஜிஸ்திரேட் மிஸ்டர் மில்னர் ஒயிட் 30-5-29-ல் மீரத் வந்து சேர்ந்தார். 1-6-29-ல் மீரத் சதி வழக்கின் விசாரணையை ஆரம்பிக்கப் படப் போவதாக முன்னர் தெரிவித்திருந்தோம். ஆனால், அரசாங்க வழக்கறிஞரான திரு. லாங்போர்டு ஜேம்ஸ் என்பார் உடல் நிலை சரியா யில்லாததனால், வழக்கு விசாரணை 12-6-29-ல் ஆரம்பிக்கப் படுமென்றும், எனவே இவ்வழக்கில் சம்பந்தப்பட்ட எதிரிகளை மீண்டும் 12-6-29-வரை காவலில் இருக்க வேண்டு மென்றும் பிரத்தியேக மாஜிஸ்டிரேட் தெரிவித் திருக்கிறார். ஷவுக்கத் உஸ்மானியின் ஜாமீன்மனு மீரத் செஷன்ஸ் கோர்ட்டில் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. நீதிபதி தீர்ப்பை ஒத்தி வைத்திருக்கிறார்.

மீரத் சதியாலோசனை வழக்கின் சம்பந்தமாகத் தற்போது மீரத் சிறையில் வதியும் சட்டசபை அங்கத்தினரான ஸ்ரீமான் தர்மவீரசிங் சட்டசபைக் கூட்டத்திற்குச் செல்ல அனுமதிக்குமாறு மீரத் மாஜிஸ்திரேட்டைக் கேட்டார். மாஜிஸ்திரேட் அனுமதிகொடுக்க மறுத்துவிட்டார். பிறகு அவர், ஐக்கிய மாகாண அரசாங்கத்தாருக்கு எழுதினார். அவ்வரசாங்கத்தார் நீதி பரிபாலன விஷயத்தில் தலையிட முடியாதென்று கூறிவிட்டனர். அதன் பின்னர் இந்தியா அரசாங்கத்து உள்நாட்டு இலாகாவுக்கு விண்ணப்பஞ் செய்தார் அவர்கள் அவ்விண்ணப்பத்தை ஐக்கிய மாகாண அரசாங்கத்தாருக்குத் திருப்பியனுப்பிவிட்டார்கள்.

### அடக்குமுறை

விவசாயிகள் தொழிலாளர்கள் சார்பாக ஜான்ஸியிலிருந்து வெளியிடப்படும் "கிரந்திகாரி" என்னும் பத்திரிகை ஆசிரியரான ஸ்ரீமான் கோபால சர்மா இராஜத் துவேஷமான வியாசத்தைப் பிரசுரித்ததற்காக சென்ற வாரம் கைது செய்யப்பட்டார்.

லாகூரில், அச்சுறுத்தல் விளம்பரமொன்றின் சம்பந்தமாக, "அபார்பான்ஸ்" அச்சுக் கூடத்தைப் போலீஸார் சோதனையிட்டனர். ஆனால் அத்தகைய விளம்பரமொன்றுங் கிடைக்கவில்லை.

ஐக்கிய மாகாண அரசாங்கத்தின் உத்தரவுப்படி டில்லி போலீஸார், "பாரதமெயின் அங்கிரேஜி ராஜ்" என்னும் புத்தகத்தைக் கைப்பற்றி 2-6-29-ல் டில்லியிலுள்ள 12 பேர் வீடுகளைச் சோதனை செய்தனர்.

### இந்திய சட்டசபை வெடிகுண்டு வழக்கு

இவ்வழக்கின் செஷன்ஸ் விசாரணை 4-6-29 ல் டில்லி சென்டிரல் சிறையில் ஆரம்பித்து மூன்று நாள்வரை நடைபெறும். எதிரிதரப்பு சாட்சிகளில் ஸர்ஜார்ஜ் ஷுஸ்டர் விசாரிக்கப்பட மாட்டாரென்று தெரிகிறது. டாக்டர் அன்ஸாரிக்கும், டாக்டர் மூஞ்சேக்கும் 'சம்மன்' கொடுக்கப்பட்டிருக்கிறது. பண்டித மாளவியா, ஜனுப் கித்பாய் இவ்விருவருக்கும்அனுப்பிய 'சம்மன்'கள்சரியான விலாச மில்லை யென்று திரும்பிவந்து விட்டன. எனவே (பம்பாய்) லொனவிலாவிலிருக்கும் மாளவியா, இவ்வழக்கிற்காக டில்லிக்கு வரும்படி தந்திமூலம் அழைக்கப் பட்டிருக்கிறார்.

### 2-வது அகில இந்திய தேவாங்கர் மகாநாடு

இம்மகாநாடு கோயமுத்தூர் சினிமா கொட்டகையில் 1, 2-6-29ல் சென்னை ஸ்ரீமான் பி. டி. குமாரசாமி செட்டியார் பி.ஏ. தலைமையின் கீழ் நடைபெற்றது. முதல்நாள் வரவேற்புக்கழகத் தலைவர் ஸ்ரீமான் வெரிவாட செட்டியார் தமது வரவேற்பு விரிவுரையை வாசித்தார். பின்னர் தலைவர் தமது தலைமையுரை நிகழ்த்தினார். அதில் தலைவர் கதரின் அவசியத்தையும் மதுவிலக்கின் மேன்மையையும் வலியுறுத்தியிருப்பது ஈண்டுக்குறிப்பிடத்தக்கது. மகாநாட்டில் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தி தேவாங்க சமூகத்துள் கல்வியைப் பரப்ப வேண்டுமென்றும், அச்சமூகக் கைத்தொழிலான, நூற்றல், நெய்தல் முதலியவைகளை நூதன முறையில் விருத்தி செய்யவேண்டுமென்றும், மதுவிலக்கு விதவா விவாகம் முதலியவைகளை அதரித்தும், தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன.

### தேவாங்க வாலிபர் மகாநாடு

இம்மகாநாடு மேற்கூறிய சினிமா கொட்டகையில்பெங்களூர் ஸ்ரீமான் புட்டண்ணசெட்டியாரின் தலைமையில் 1, 2-6-29ல் நடைபெற்றது. அதில், சிறுவர் சிறுமிகளுக்குக் கட்டாய முறையில் ஆரம்பக் கல்வி போதிக்கப் படவேண்டுமென்றும், பால்ய விவாகத்தை ஒழிக்கவேண்டுமென்றும் முதலிய தீர்மானங்கள் செய்யப்பட்டன.

### தேவாங்கப் பெண்கள் மகாநாடு

அகில இந்திய தேவாங்கப் பெண்கள் மகாநாடு கோவை, "சாரதா" மண்டபத்தில் 2-6-29ல் பெங்களூர் ஸ்ரீமதி இலட்சுமி தேவி தலைமையின்கீழ் நடைபெற்றது. கோவை ஜில்லா கல்விச்சபை அங்கத்தினர் ஸ்ரீமதி லலிதா பாலசுந்தரம் அம்மாள் உபசரணைத் தலைவராகவிருந்து எல்லோரையும் வரவேற்றார். அதுபோது ஏழாம் வகுப்பு வரை பெண்களுக்கே கட்டாயப் படிப்பு கொடுக்க வேண்டுமென்றும், பெண்கள், 15, 16 வயதுக்கு மேற்பட்டே கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்றும், பெற்றோர்கள் பெண்ணின் சம்மதம் பெற்றே அவளுக்குரிய மணமகனைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், விதவைகளுக்குத் தகப்பனார் சொத்திலும், கணவன் சொத்திலும் உரிமையிருக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

Sowriya
RECD.
சகோதரிகளே!
நான் 39 வருஷங்கள் வரையில் புத்திர பாக்கியமில்லாமலிருந்தேன். சதா அவஸ்தை கொடுத்து வந்த சூதக வியாதி "சௌரியா" என்னும் சஞ்சீவியால் குணப்பட்டது. தற்போது புத்திர பாக்கியமு மடைந்தேன். இச் சந்தோஷத்தை என்னைப் போன்ற சகோதரிகளுக்குத் தெரிவித்து நான் பெற்ற இன்பத்தை அவர்களையும் பெற வேண்டுகிறேன.
சுந்தராம்பாள்.
புட்டி 1-க்கு விலை ரூ. 3-0-0.
பாக்கிங் தபாற் செலவு வேறு.
கேட்லாக் இனாம்!
சங்கரராம் மெடிகல் ஹால்,
சேலம்.

விலை சரசம்! சுக மதிகம்!!
இது விளையாட்டுக் கருவி அல்ல
திருப்தி இல்லாவிடில் பணம் வாபீஸ் செய்யப்படும்
உத்திரவாதமுள்ள "கிராம போன்"
அருமையான கீதங்கள் பாடக்கூடியது. நேரில் கேட்டு அனுபவித்தால்தான் உண்மை விளங்கும்.
இந்த கிராமபோன் பெட்டிக்குப் பெரியபெட்டியி விருப்பதுபோல் சவுண்போக்சும், ஆரன் ஊசிப் பெட்டியும்இருக்கின்றன. இத்துடனிருக்கும்இரண்டு புறம் பாடக்கூடிய ரிகார்டைப் போட்டுக்கொண்டு வந்தால் அருமையான இந்துஸ்தான், இங்கிலீஷ் பாடல்கள், பாண்டுகள் இன்னும் பலவித கீதங்களைப்பாடி நிறைந்த சந்தோஷத்தைத் தரும்.
பெட்டியுடன் ரிகார்டு 1-ம் ஊசிப்பெட்டியும் இனாமாக அனுப்பப்படும்.
விலை ரூபா 6-8-0. தனி ரிகார்டு 1-க்கு ரூபா 1-0-0 வி. பி. சார்ஜ் ரூ. 1.
விலாசம் :—R. தரனி அண்டு கம்பெனி,
28, கந்தசாமி கோவில் தெரு, பொம்பூர் பாரக்ஸ் போஸ்டு, மதராஸ்.



### ரயில் பிரயாணம் நரக வேதனையே

#### சீர்திருத்தத்திற்கு ஒரு யோசனை

இந்தியாவில் ரயில் பாதை போட்டதனால் பிரிட்டிஷார் இந்திய மக்களுக்குப் பெரிய தொரு நன்மை செய்து விட்டதாய்ச் சிலர் சொல்லுகிறார். இத்தகையோர் சென்ற 23௳ இரவு என்னுடன் திரிசிராப்பள்ளியிலிருந்து ஈரோட்டுக்குப் பிரயாணம் செய்திருந்தால் நிச்சயமாய்த் தங்கள் கருத்தை மாற்றிக்கொண் டிருப்பர். ரயில் பாதை போட்டதினும் பெரியதீமை பிரிட்டிஷார் செய்யவில்லை யென்று அவர்கள் எண்ணவும் நேர்ந்திருக்கலாம். மேற்படி பிரயாணத்தில், "40 பேருக்கு" என்று குறிப்பிட்ட மூன்றாம் வகுப்பு வண்டியில் நாங்கள் 89 பேர் உட்கார்ந் திருந்தோம். ஒவ்வொரு பலகையிலும் ஆறு பேர்; பலகைகளுக்கு நடுவில் நின்றவர் நாலைந்து பேர்; வழிநடையில் வரிசையாக நின்று கொண்டோ, உட்கார்ந்து கொண்டோ வந்தவர் பலர். ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ஒரு பெரிய போராட்டம். வெளியிலிருந்தவர் வண்டியில் ஏற முயன்றார்கள்; உள்ளிருந்தவர் அவர்களைப் பிடித்துத் தள்ளினார்கள். சிலர் ஜன்னல்வழியே சாமான்களை எறிந்து தாங்களும் ஏறிக் குதித்து உள்ளே வந்தனர். அப்போது இவர்கள் காலினால் மிதிபட்டுப் புலம்பியவர் பலர். வண்டியில் ஏறும்போது நடந்த தடபுடலில் ஒரு பெண்மணிக்கு முகவாய்க் கட்டையில் நன்றாக அடிபட்டுவிட்டது. சுமார் 30 பேர் இரவு முழுதும் நின்றுகொண்டே வந்தனர். அப்பால் இப்பால் அசைய முடியாமல் கூட்டம் நெருங்கி யிருந்தபடியால் யாரும் கக்கூசுக்குப் போக முடியவில்லை. எனவே இரவு முழுதும் சிறுநீர்கழிக்க வழியின்றி ஜனங்கள்பட்ட அவதியைச்சொல்லி முடியாது. சுருங்கச் சொன்னால் அன்றிரவு எங்கள் பிரயாணத்தை "நரக யாத்திரை" என்று கூறுதல் மிகவும் பொருத்தமா யிருக்கும்.

இந்த நிலைமை இப்பொழுது புதிதாக ஏற்பட்டதன்று; நெடுநாளாக இருந்து வருவதுதான்; எனினும் இந்நிலைமையைச் சீர்திருத்த இதுகாறும் பெரு முயற்சி எதுவும் செய்யப்படவில்லை. நமது அரசியல் தலைவர்கள், சட்டசபை அங்கத்தினர் முதலியோர் இரண்டாம் வகுப்பு, முதல் வகுப்பு வண்டிகளிலேயே சாதாரணமாய்ப் பிரயாணம் செய்வது தான் இதற்குக் காரணமாகும். அவர்கள் மூன்றாம் வகுப்புப்பிரயாணிகளின் துன்பங்களை நேரில் அறிந்து கொள்வதற்கில்லை. சட்ட சபைக்கு வாக்களிக்கும் வாக்காளரில் 100க்கு 99பேர் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள். தங்கள் பிரதிநிதிகளாகச் சட்டசபைக்குச் செல்வோர் மூன்றாம் வகுப்பிலேயே பிரயாணம் செய்ய வேண்டுமென அவர்கள் வற்புறுத்தவேண்டும். அப்போது தான் இந்நிலைமையில் சீர்திருத்த மேற்படும். தேக அசௌக்கியம் முதலிய முக்கிய காரணம் ஏதேனும் இருந்தாலன்றி மற்றப்படி மூன்றாம்வகுப்பிலேயே பிரயாணம் செய்வதாகச் சட்டசபை அபேட்சகர்கள் வாக்குறுதி கூறவேண்டும். அத்தகைய வாக்குறுதி அளிப்போருக்கே வாக்காளர் தங்கள்வாக்கைத் தரவேண்டும். என்னைப் போல் மூன்றாம் வகுப்புப் பிரயாணத்தில் துன்பமடைந்தவர்கள் எல்லாரும் இந்த யோசனையைப்பற்றிச் சிறிது கவனம் செலுத்துவார்களென்று நம்புகிறேன்.

ரா. கிருஷ்ணமூர்த்தி.

வெள்ளி பஸ்பம்
வெள்ளை, வெட்டை, மூலங்கள், எலும்புருக்கி, நீரிழிவு, ஷை சம்பந்த குன்மம் பெரும்பாடு எல்லாம் தீரும். தளர்ந்த தாது வலுக்கும். மற்ற நோய்களுக்கும் மருந்துண்டு. வியாதியின் விபரம் எழுதினால் தக்க பரிகாரம் மருந்துடன் தெரிவிக்கப்பெறும். 5 நாளில் நிச்சயம் குணம் தெரியும். 40 நாள் மருந்து ரூ. 5.
விலாசம் :—
சே. விசுவநாத செட்டியார்,
வைத்யம், லாலுகுடி, திருச்சி ஜில்லா.

லக்ஷ்மி தாண்டவம் ஆடும்!
சமையல் சுலபமாய் ஆக, சாப்பாடு ருசியாயிருக்க, செலவு சுருக்கமாயடங்க, சௌக்கியம் நிறைவாய்ஓங்க, சந்தோஷம் பொங்கிவழிய லக்ஷ்மி தாண்டவம் ஆடுவாள்
அதற்கு உங்கள் வீட்டில்
ருக்மணி குக்கர்
இருக்கவேண்டும்
1, 2, 4, 6, 8 பேர்களுக்குச் சமையல் செய்யக் கூடிய ஐந்து அளவுகள் உள்ள குக்கர்களின் விலை முறையே ரூபா 13, 18, 22, 27, 33.
விபர புத்தகம் இனம்
ருக்மணி குக்கர் கம்பெனி,
இராயபுரம் (3) சென்னை.

இனிய கதை! இன்பநடை! புதிய சுவை!
சாரதையின் தந்திரம்
முதலிய கதைகள்
(1) சாரதையின் தந்திரம், (2) ஒன்பது குழி நிலம், (3) சுபத்திரையின் சகோதரன், (4) காங்கிரஸ் ஸ்பெஷலில் கோர சம்பவம், (5) தற்கொலை, (6) விஷமந்திரம், (7) நம்பர். 888, (8) கவர்னர் விஜயம்.
இவை வெறும் பொழுது போக்குக் கதைகள் அல்ல. தமிழ் நாட்டின் தற்கால சமூகவாழ்வையும், அரசியல் வாழ்வையும் அடிப்படையாகக் கொண்ட எட்டு கற்பனைச் சித்திரங்கள். ஒவ்வொரு கதையிலும் ஒரு புதிய சுவை, ஓர் அரிய நோக்கம் காணலாம். கதைகளின் போக்கைப் பின்வரும் குறிப்புகள் ஒருவாறு விளக்கும் :— (1) குதிரைப் பந்தய மோகத்தில் வீழ்ந்து அடியோடு நாசமாகும் தருணத்திலிருந்த ஓர் இளைஞனை அவன் மனைவியின் தோழி ஒரு விந்தையான சூழ்ச்சியினால் மீட்ட வரலாறு; (2) ஒன்பது குழி நிலத்திற்காக ஒன்பதினாயிரம் ரூபா செலவிட்டு வழக்காடிய இருகுடும்பத்தார், குழந்தை நீலாம்பிகையின் மூலம் ஒற்றுமைப்படல்; (3) சுபத்திரையைக் "குள்ளநரி" மாப்பிள்ளையிடமிருந்து தப்புவிப்பதற்காக அவள் தாயும், சகோதரனும் செய்த ஒப்பற்ற தியாகங்கள்; தியாகராஜனின் சந்திரமண்டலப் பிரயாணமும் அதன் அற்புத முடிவும்; (4) அரசியல் வாதிகளின் சுயநலப் பித்தலாட்டங்களை வயிறு குலுங்கச்சிரிக்கவைக்கும் முறையில் கூறும் கற்பனை; (5) பரீட்சை தேறவில்லையென்றும் ஒருவரும், பரீட்சை தேறியும் பயனில்லையென்று மற்றொருவரும் ஒரே இடத்தில் ஒரே நேரத்தில் உயிர் துறக்கச் செல்தல்—அதன் முடிவு; (6) பாம்பின் விஷம், தீண்டாமை விஷம் இரண்டும் ஒரே மந்திரத்தில் இறங்கும் அதிசயம்; (7) ஸ்ரீமான் கேசவலு நாயுடு புதையல் பைத்தியத்தினால் 'நம்பர் 888' ஆனவிவரம்; (8) கவர்னர் தயவைப் பெறுவதற்குப் பட்ட வேட்டைக்காரர்களின் நகைக்கத் தக்க போட்டியும், அவர்கள் அடையும் ஏமாற்றமும்.
விலை அணா 12.
முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

## மதிப்புரை

### ஹென்ரி போர்ட்

[வெளியிட்டோர் : 'தமிழ்நாடு' லிமிடெட், சேலம் & சென்னை; விலை: ஒன்றரை ரூபாய்; தபாற்கூலி வேறு.]

'போர்ட்' மோடார் வண்டியை அறியாதார் யார்? இவ்வண்டியை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையின் சொந்தக்காரர் ஸ்ரீமான் ஹென்ரி போர்ட் உலகத்துச் செல்வர்களில் இதுகாலை தலைசிறந்து விளங்குகிறார். அவருடைய சரித்திரம், இந்நூலில் அடங்கி யிருக்கிறது. முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார். வறுமைக்காக வருந்தி நிற்றல் வாணாளை வீணாக்குவதாகும். ஸ்ரீமான் ஹென்ரி போர்ட், வறுமையை மிதித்துச் செல்வப்படியில் ஏறுதற்கு அவருடைய விடா முயற்சியும், வியாபார தத்துவங்களின் நுண்ணறிவுமே அவருக்குத் துணை செய்தன. இந்நூலில் உள்ள ஒவ்வோர் அதிகாரத்திலும் மானிட வாழ்க்கைக்குப் பயன்படக்கூடிய பல அமிசங்கள் நிறைந்திருக்கின்றன. முதலாளிக்கும் தொழிலாளிக்கும் எத்தகைய சம்பந்தம் போர்ட் தொழிற்சாலையில் இருக்கிறதென்பதை, தொழில் நடத்துவோர், நடத்த விரும்புவோர் அறிந்து கொள்ளல் அவசியம். ஸ்ரீமான் ஹென்ரி போர்ட் எழுதிய நூலே, தமிழ்வடிவாக வெளிவந்திருப்பதைத் தமிழ் நாட்டார் பாராட்டுவர் என்பதில் ஐயமில்லை.

### நீதிநெறி விளக்கம் மூலமும் விருத்தி உரையும்

[உரையாசிரியர்: சோடசாவதானம் உயர்திரு. தி. சுப்பராய செட்டியார் அவர்கள்; நூல்கிடைக்குமிடம்: எஸ். விவேகானந்தர் கம்பெனி, பார்க்டவுன், சென்னை; விலை: எட்டு அணா.]

நல்வழி, நன்னெறி, நீதி நெறி விளக்கம், வெற்றி வேற்கை போன்ற நீதி நூல்களை முற்காலத்தில் தெருப்பள்ளிக் கூடங்களில், மாணுக்கர் மனப்பாடமாக ஒப்புவித்து வந்தனர். எளிய நடை, அழகிய உவமானங்கள் இவைகளோடு கூடியுள்ள இந்நீதிகளை; தங்கள் வாழ்க்கையில் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரவும் அவர் முயன்றனர். ஆனால் தற்காலக் கல்வி முறை, இவைகளுக்கெல்லாம் இடங்கொடுக்க வில்லை. ஆயினும் தமிழ் மொழிக்கு ஒரு புதிய யுகம் பிறந்திருப்பதாகக் கூறப்படும் இக்காலத்தில், இத்தகைய நூல்கள் வெளியாதல் மிக அவசியம். இதில் ஒவ்வொரு செய்யுளுக்கும் பதவுரை, விரிவுரை முதலியன நன்றாக வரையப்பட்டுள்ளன. காலஞ் சென்ற சுப்பராய செட்டியார் அவர்கள் வரைந்த விருத்தியுரை எனின் நாம் அதிகமாகக் கூற வேண்டுவ தில்லை. இதைத் தமிழ் நாட்டார் பெரிதும் ஆதரிக்கவேண்டுகிறோம்.

### அரசர் அமானுல்லாகான் அல்லது ஆப்கன் நிலை

[ஆக்கியோன்: ஸ்ரீமான் மு. நா. நாராயணசாமி தினகரன்; புத்தகம் கிடைக்கு மிடம்: மானேஜர், 'சுதந்தரன்' காரியாலயம், ரெயில்வே பிளாக், இரங்கூன்; விலை: ஒரு ரூபாய்: தபால் கூலி வேறு.]

தற்போது, உலகத்தின் கவனத்தை, முக்கியமாக மேனாட்டாரின் கவனத்தை ஈர்த்து வருவது ஆப்கன் நிலையேயாகும். இந்நிலைக்கு நடுநாயகமாக இலங்குவோர் அரசர் அமானுல்லாகான். இவருடைய சரித்திரத்தையும் சமீபத்தில் தொடங்கிய ஆப்கானிய உள்நாட்டுப் போரின் விவரங்களைப் பற்றியும் இந்நூல் விரிவாகக் கூறுகின்றது. காதர்கான் மேனாட்டிலிருந்து திரும்பிவந்து ஆப்கானிஸ்தானம் சென்ற வரை இந்நூலில் காணலாம். இதைத் தமிழர், படித்து சுதந்திர உணர்ச்சி பெறுவர் என்று கருதுகிறோம்.

### திருக்குறள் மூலமும் பொழிப்புரையும்

[வாலாஜாபாத் இந்துமத பாடசாலை தலைமையாசிரியர் திரு. கி. வீரராகவன் அவர்கள் இயற்றிய பொழிப்புரையுடன் கூடியது; வெளியிட்டோர் தமிழ் நூற்பதிப்புக் கழகம், காஞ்சிபுரம்; விலை: எட்டு அணா.]

திருக்குறள் பதிப்புகள் எத்தனை வந்த போதிலும் அவைகளை நாம் மனமார வரவேற்போம். இப்பதிப்பு, சுத்தமாயும், எளிய இனிய தமிழில் எழுதப்பட்ட பொழிப்புரையுடனும் கூடி யிருக்கிறது. நன்றாய்ப் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. திருக்குறளின் பதிப்புகள் பல வெளி வருவதால், இந்நூலின் பெருமையை இப்பொழுதே தமிழ் நாட்டார் உணர ஆரம்பித்திருக்கின்றனரென்பது தெரியக் கிடக்கின்றது. இவ்வுணர்ச்சி மேன் மேலும் மோங்கி வளர்ந்து, தமிழ் மொழிக்கு நலம் பயப்பதாக.

### மங்கையின் முத்தம்

[புத்தகம் கிடைக்குமிடம்: 'கல்பதரு' பிரசுராலயம், 80 ராமசாமித் தெரு, மண்ணடி, சென்னை; விலை: இரண்டு ரூபா.]

இதில் மங்கையரை அழகுபெற முத்தமிடும் ஆயிரம் முறைகள் கூறப்பட்டிருப்பதாக ஆசிரியர் தெரிவிக்கிறார். பிழையின்றி அச்சிடப் பட்டிருக்கிறது. பல படங்கள் அடங்கியிருக்கின்றன. புத்தகம் படிப்பதற்கு நன்றாக இருக்கிறது.

### புத்தக வரவு

பிரமோ பாசன தீபம்:—என்னும் கடவுள் வழிபாட்டு விளக்கம். திருநெல்வேலி பிரம சமாஜத்தார் வெளியிட்டது. விலை குறிக்கப்பட வில்லை.

கிராமக் கல்வி:—மாயவரம் ஸ்ரீமான் ஏ. நடேசபிள்ளை அவர்கள் இயற்றியது. கிராம வாசிகளுக்கு இன்றியமையாதது. பிரதி ஒன்றுக்கு விலை நாலணா. வேண்டுவோர், ஆசிரியருக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

மாதவ கோவிந்தசதகம்:—திரு: அரங்கதாஸ ரவர்களால் இயற்றப்பெற்று இரங்கூன் சுதந்திரன் அச்சு நிலயத்தில் முத்திரிக்கப் பெற்றது. விலை: நான்கு அணா.

ஸ்ரீ கண்ணன் திவ்யாமிர்தக் கீர்த்தனம்:—இலுப்பையூர் ஸ்ரீமான் ப. ம. பூமிநாதன் இயற்றியது. புத்தகம், இரங்கூன் "தேசோபகாரி" காரியாலயத்தில் கிடைக்கும், விலை: நான்கு அணா.

சிலுவையின் தாற்பரியமும் கிறிஸ்தவர்களின் சாட்சியும்:—திருப்பத்தூர் கிறிஸ்து குல ஆசிரமத்தின் பிரசுரம். விலை தெரியவில்லை.

மாதர் மதி மாலிகை:—திருக்கோணமலை மாதர் ஐக்கிய சங்கத்தாரால் வெளியிடப்படுவது.

தாராபுர வெண்பா வந்தாதி:— ஆசிரியர்:— தாராபுரம், ஆனரரி மாஜிஸ்டிரேட் திருவாளர். கா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள். விலை அணா 3. இந்நூல் ஆசிரியரிடம் கிடைக்கும்.

(1) உயிரும்—உடம்பும், (2) சுகவழி—108 :— ஆக்கியோர்: இராமநாதபுரம் ஜில்லா, கீழச்சிவற்பட்டி திருவாளர். லெ. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள். (1) இந்நூலில் உயிருடலுக்கு இன்றியமையாது வேண்டிய பல பொருள்கள் திகழ்கின்றன. (2) இது சுகாதாரத்தை உணர்த்தும் 108 நீதி மொழிகளடங்கிய ஒரு சிறுநூல். இவ்விரண்டு நூல்களையும் மக்களாய்ப் பிறந்த நாமனைவரும் வாசித்தல் மிக அவசியம். இவ்விருநூல்கள் வேண்டுவோர் மேற்கண்ட விலாசத்துக்கு அரையணா தபால் முத்திரை அனுப்பிப் பெறலாம்.

பொதுஜன ஊழிய சங்கத்தின் துண்டுப் பிரசுரங்கள்:—இச் சங்கத்தாரிடமிருந்து "தீபாவலியில் நாம் அடையும் பலன்" "வேண்டுகோள்" "கிறிஸ்துமஸ் பண்டிகை" "பிரார்த்தனை" "அன்பேகடவுள்" "கடன், சகோதரத்துவம், ஜீவகாருண்யம், சிறந்த பணி" "உண்மையானபக்தன்யார்?" "புத்தூர் குழுமி ஆயிடைக்கு" "மலையனூர் அங்காளம்மன்வாக்கு" "புத்தூர் குழுமி ஆயிக்குப் பலியா?" என்னுந் தலைப்புக்கள் கொண்டபத்து துண்டுப்பிரசுரங்களும், "கொல்லாமை" "ஜீவகாருண்யம்" "சமரசம்" "சன்மார்க்கம்" என்னுந் தலைப்புக்களுக் குரிய பாக்களடங்கிய 4 துண்டுப் பிரசுரங்களும் வரப்பெற்றோம். இச்சங்கத்தார் நம் நாட்டின் தற்கால நிலைக்கேற்ற வண்ணம் சமரச சன்மார்க்கவழியில் பரந்த நோக்கத்துடன் உண்மைத் தொண்டு

செய்துவருவது மிகவும் போற்றத்தக்கது. இப்பிரசுரங்கள் வேண்டுவோர் "பொதுஜன ஊழிய சங்கம், ஆதம்பாக்கம், பரங்கிமலை" என்னும் விலாசத்துக்கு எழுதிப்பெறலாம்.

சிந்தாமணி விநாயகர் வெண்பா:— இது, சண்முகப்பெருமான் படை வீட்டு மாலை, தெய்வயானை வள்ளியம் மைதுதிகள் காவடிச்சிந்துமுதலியன அடங்கியது. விலை முதலியன தெரியவில்லை.

பர ராச சேகரம்:—(முதற்பாகம்: சிரோக நிதானம்) யாழ்ப்பாணத்து ஏழாலை சுதேச வைத்தியர் ஐ. பொன்னையா பிள்ளை பதிப்பித்தது. விலை முதலியன தெரியவில்லை.

(1) ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகள் சரித்திர சுருக்க முதலியன (2) திருநாவுக்கரசு நாயனர் சரித்திரச் சுருக்கம் முதலியன:— இவ்விரு சிறு நூல்களும் திருநெல்வேலி ஜங்ஷன், சித்து பூக்தறை, அறத்திரு நெறிக் கழகத்தாரால் வெளியிடப்பட்டன. வேண்டுவோர் மேற்படி கழகத்தாருக்கு ஓர் அணாதபால் தலை அனுப்பி இவ்விரு நூல்களையும் பெறலாம்.

-ஃ-

பத்திரிகை வரவு

அகில இந்திய லாஜர்னல்:— இது திருவள்ளூரினின்று வெளிவரும் ஒருமாதப் பத்திரிகை. ஆங்கில மறியாதவர், சட்ட சம்பந்தமான பல விஷயங்களை அறிந்து கொள்ள இப்பத்திரிகை பெரிதும் துணை செய்யும். நீதிமன்றங்கள் பலவற்றுள் அவ்வப்பொழுது செய்யப்படும் முக்கியமான தீர்ப்புகள் இதில் காணப்படுகின்றன. இவை, நியாயவாதிகளுக்கும் கிராமங்களில் நீதி பரிபாலனம் செய்வோர்க்கும் வழிகாட்டியாயிருக்கும் என்பதில் ஐயமில்லை. இதன் வருஷசந்தா ஐந்து ரூபா; தனிப்பிரதி எட்டு அணா. வேண்டுவோர், மானேஜர், அகில இந்திய லாஜர்னல் ஆபீஸ், திருவள்ளூர் (செங்கற்பட்டு ஜில்லா.) என்று எழுதிப் பெற்றுக் கொள்வார்களாக.

வியாபாரி:—இஃதொரு மாதப் பத்திரிகை, தொழிலே மதம்; வாணிபமே உயிர் என்ற கொள்கையுடையது. ஸ்ரீமான் கே. எஸ். சுந்தரம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு கே. எஸ். முத்தையா கம்பெனியாரால் வெளியிடப்படுவது. இதன் வருஷசந்தா எட்டணாவே. தமிழ் நாட்டார் இதனை நன்கு ஆதரிப்பர் என்று நம்புகிறோம்.

வேளாளன்:—ஆசிரியர்: ஸ்ரீமான் மு. பொன்னம்பலம் அவர்கள். வருட சந்தா உள்நாடு ரூ. 2. வெளி நாடு ரூ. 2-8-0. விலாசம்: "வேளாளன் நிலையம்," தூத்துக்குடி. இஃதொரு மாதப்பத்திரிகை, வேளாளர் முன்னேற்றத்தைக் கருதி வெளியிடுவது. பொதுவாகத் தமிழ்நாட்டாரும், சிறப்பாக வேளாளரும் இதை ஆதரிக்க வேண்டுகிறோம்.

இந்திய மித்திரன்:— இஃது ஸ்ரீமான் க. வேணுகோபாலன் அவர்களை ஆசிரியராகக்கொண்டு மலேயா நாட்டினின்று வெளிவரும் ஒரு வாரப்பத்திரிகை வருட சந்தா: இந்தியா, பர்மா. இலங்கை முதலிய விடங்களுக்கு = 4 ஷிலிங் அல்லது ரூ 3. விலாசம்:— "இந்திய மித்திரன்," காரியாலயம் 87, பெல் பீல்டு தெரு, ஈப்போ. (மலாயா)

-ஃ-

காலண்டர் வரவு

புதுக்கோட்டை தேச ஊழியன் காரியாலயத்தாரால் வெளியிடப்பட்ட சுக்கில வருஷத்துக் காலெண்டர் வரப்பெற்றோம்.

கோயமுத்தூர், புதுமார்க்கெட், நல்லெண்ணெய் வியாபாரியான ஸ்ரீமான் எ. பி. இராமலிங்கம் செட்டியாரிட மிருந்து 1929 வருஷத்துக் காலண்டர் ஒன்று வரப் பெற்றோம்.

காரைக்குடி, ஹிந்து மதாபிமானசங்கத்தார் அனுப்பிய தமிழ்ப் புது ஆண்டு காலண்டர் வரப்பெற்றோம். இதில் ஆங்கிலத் தேதியும் அடங்கி இருக்கிறது. பன்னிரண்டு தாளிலும் பாரத நாட்டுப் பெரியார்கள் திருஉருவமும், அப்பெரியார்களின் பொன்னுரைகளும், சங்கத்தின் நோக்கமும் பொறிக்கப் பட்டிருக்கின்றன.

## ரிக்வேத காலத்து ஐம்பெருங் குடிகள்

இராயப்பேட்டை வேதப்ரவசன மந்திரத்தில் சென்ற வியாழக்கிழமை பல அறிஞர்கள் முன்னிலையில் மேற்கண்ட விஷயத்தைப்பற்றி ஸ்ரீசிவத்தியா நாகந்த மஹரிஷி ஓர் உபந்யாஸம் செய்தனர். அதன் சுருக்கம் வருமாறு:—

ரிக் வேதம் 6-வது மண்டலம் 21-வது சூக்தத்தில் ப்ரத்நாஸ: (புராதனர்கள்) மத்தியமாஸ: (இடைக்காலத்தர்) நூதனாஸ: (நவீனர்கள்) அவமர்கள் (அதிநவீனர்கள்) என்று சிலரைப் பற்றிக் கூறப் பட்டுள்ளது: இதுவே வேறு பல இடங்களில் கூடச் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் முக்கியமாக மூன்று வகுப்பினரிருந்தன ரென்று தெரியவரும். புராதனர்கள் இற்றைக்குப் பதினையாயிரம் வருஷங்களுக்கு முன்னர் இருந்தவராவர். அதிநூதனர் இற்றைக்கு 5000 வருஷங்களுக்கு முற்பட்டவர். இடைக்காலத்தவர் கி. மு. 15000-லுக்கும் கி: மு. 10000 வருஷங்களுக்கும் இடைப்பட்ட காலரிஷிகளாம். இவ்வெல்லாரும் ஐம் பெருங்குடிகளைப்பற்றிச் சொல்லி யிருப்பாரேனும் அச்சொற்றொடரை எல்லாரும் ஒரே பொருளில் உபயோகிக்கவில்லை. ரிக்வேதம் 1-108 8-ல் யதுக்கள், துர்வசர், த்ருஹ்யுக்கள், அநுக்கள், பூருக்கள், என்பவர் ஐம்பெருங் குடியினரென்று சொல்லப்பட்டுள்ளது. இது கொண்டு மேனாட்டு வேத உரைகாரர் வேத முழுவதும் இதுவே வழக்கு எனச்சாதிக்கின்றனர். ஆனால் ரிக்வேதம் 10-வது மண்டலம் 90-வது சூக்தத்தை ஆதாரமாகக்கொண்டு நிருக்தக்காரரும் அவர்க்குப் பின் வந்த ஸாயணரும் நான்கு வருணத்தவரும் நிஷாதரும் என்று ஸாதிப்பர். இவருள் நிருக்தம் எழுதிய யாஸ்கர், தேவர், மனிதர், அசுரர், பிதிரர், ரக்ஷர் என்று சிலர் சொல்லுகிறார்களென்றும் கூறுகிறார். உண்மை இவ்விரு திறத்தினர் பக்கத்திலும முற்றும் சார்க்கில்லை. பூருவகாலத் தினராகிய ரிஷிகள் பஞ்சஜன ரென்றும், மத்திம காலரிஷிகள் பஞ்சக்ஷிதயர்களென்றும், கடைக்கால அல்லது நவீனகால ரிஷிகள் பஞ்ச கிருஷ்டியர்கள் அல்லது பஞ்சசர்ஷணிகளென்றும் கூறியுள்ளார்கள். இதனால் இடைக்காலத்து ஐம் பெருங்குடிகள் ஐவகை நிலத்தின ரென்று அர்த்த வாதத்தால் வெளியாகிறது. இவர்களே தொல்காப்பியர்கூறும் ஐந்திணையினர் இவர்களது காலமே இற்றைக்குப் பதினையிர வருஷங்களுக்கு முன் என்போம். ரிக் வேதத் தொடக்க காலத்தில் தேவர்கள் (ஆரியர்கள்) அசுரர்கள் (ஐரானியர்கள்) என்னும் இரண்டு வகுப்பினரே ஸப்த சிந்துப் பிரதேசத்தில் இருந்தவர்கள். இவ்விருவரும் அக்னியை வணங்குபவர்கள். தேவாசுர யுத்தம் வெகுநாள் நடந்தது. பின்னர் அசுரர் மடிந்தோ உத்தர துருவத்துக்கும் ஐரானிய பீட பூமிக்கும் போயோ ஆரியர்கள் தனிப்படலாயினர். அவர்களுட் பல வகுப்பினரிருப்பினும் மேற் சொன்ன யதுக்கள் முதலியவர்களே ஸோமம் பிழிந்து இந்திரனைத் திருப்தி செய்தவர்கள். அதற்குப் பிறகு ஆரியருட் பலவகுப்புகள் ஏற்பட்டன. ஸோமத்தை அதிக விலைக்கு விற்கும் பணிகளும், ஆரியர் பசுக்களைக் கொள்ளையடிக்கும் தஸ்யுக்களும், அவர்களது பசுக்களை யடைத்து வைக்கும் தாஸர்களும், அகிகளும், மற்றும் இந்திர வணக்கத்தை ஒப்புக்கொள்ளாத அஜர்கள் முதற்பல குடியினரும் நிறைந்தனர். என்றாலும் ஐம் பெருங்குடியினர் என்ற சொல் உபயோகிக்கப்படாமற் போகவில்லை. ஆனால் அதற்கு இப்பொழுது வேறு பொருள் ஏற்பட்டது. அவர்களது நாமமும் பஞ்சக்ஷிதய என்று வழங்கத் தலைப்பட்டது. தமிழர் இந்துஸ்தானத்தைப் பூரணமாக விட்டுப் பிரிந்த பின்னர் தொழில் வேறுபாடு மாந்தரைப் பிரிக்கலாயிற்று. இதுரிக்வேத நவீனகாலம். இப்பொழுதுள்ள ரிஷிகள் பஞ்சகிருஷ்டய: பஞ்ச சர் ஷண்ய: என்று பாடலாயினர். இவர்களே 4-ஜாதியினரும் வேடராகிய நிஷாதருமாம். அதனால் ரிக்வேதத்தில் ஐம்பெருங்குடிகளென்றால் இம்மூவகுப்பினரும் குறிக்கப்படுவர். அதனால் மேனாட்டவர் செய்யும் உரையும் ஸாயணர் கூறும் உரையும் முற்றும் பொருந்தாவுரைகளாம் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

கள்ளு சாராயம்

கஞ்சாவை

அடியோடு

ஒழிக்கவேண்டும்

ச. இரா.


# மின்சாரரசம்

சகல வியாதிகட்கும் தேவாமிர்தம் போன்றது.

உங்களுக்கு எந்த விதமான நோய் - உபத்திரவம் - தோந்திரவு ஏற்பட்டாலும் உடனே மின்சார ரசத்தைத் துளிக் கணக்காக உபயோகித்து நிமிஷக் கணக்கில் குணம் பெறலாம்.

பத்திய : : : : : : மில்லை!

அநுபான : : : : : மில்லை!

N. S. வைத்தீஸ்வரய்யர்., B. A. வக்கீல், திருப்பூர்:— ** எனது காலில் ஒரு பெரிய விப்புருதி கட்டி வந்து நடக்க சக்தியற்று படுக்கையில் கிடந்தேன். பொறுக்க முடியாத வலி இருந்தது. மின்சார ரசத்தைத் தடவின உடனே வலி குறைந்தது. இரண்டொரு தினங்களில் பூரண சுகமடைந்தேன். **

A. G. முத்தையா B. A. தாசில்தார் கோவில்பட்டி:— ** இந்த ஔஷதம் ஒவ்வொரு குடும்பத்திலும் அவசியம் இருக்க வேண்டியது. டாக்டர்களுக்கு செலவிடும் பணத்தை இது மீதி செய்து விடும். எல்லா வியாதிகட்கும் தேவாமிர்தம் போன்றதென்ற பெயர் இந்த மருந்துக்கே தகும். **

D. P. சுந்தரேசன், B. A. பார்த்தாண்டம்:— ** மின்சார ரசத்தினால் இருமல், ஐல தோஷம், ஜுரம் இவைகள் உடனே நிவர்த்தியாயின. பல்லின் ஈரின் மேலிருந்த வீக்கம் மிகவும் ஆச்சரியகரமாக குணமடைந்த தற்காக வந்தனம். **

அதி அற்புதமான சிகிச்சை! குணம்!

மின்சார ரசத்தினால் தீராத வியாதிகளே இல்லை யென்பது பல்லாயிரக் கணக்கான ஜனங்களின் அநுபவம்—நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்றிருக்கின்றன. கைகண்ட மருந்து.

உண்மை அறிய ஒரே முறை பரிக்ஷியுங்கள்!

எல்லா இடங்களிலும் கிடைக்கும்

புட்டி 1-க்கு ரூ. 2. தபாற் செலவு வேறு. கேட்லாக் இனாம்.

விலாசம்:—

மின்சார ரசம் கம்பெனி, (லிட்) சேலம்.



## மனிதவாழ்க்கையும் காந்தியடிகளும்

மூன்றும் பதிப்பு—விரித்து எழுதப்பட்டது

விலை ரூபா 2—8—0

ஸ்ரீமான் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இயற்றியது. இந்நூல் காந்தியடிகளின் வரலாற்றைக் கூறுவதன்று. இஃது அவர் வரலாற்றிலுள்ள நுட்பங்கள் மனித வாழ்க்கையோடியைந்து நிற்கும் முறையைக் குறிப்பது; அதாவது காந்தீயத்தை அறிவுறுத்துவது; பகவத்கீதை திருக்குறள் என்னும் இரண்டு நூல்களின் சாரமாக அமைந்துள்ளது.

இந்நூற்கண் விளங்கும் முதற்பொருள் மூன்று. (க) மனிதன் எவன் என்பது, (உ) ஒருவன் மனிதனாக எத்தகை வாழ்க்கை நடாத்தல் வேண்டு மென்பது, (ங) மனிதவாழ்க்கைக்கு இலக்கியர் மகாத்மா காந்தி என்பது.

முதற் பகுதியில் மனிதப்பிறவியின் விழுப்பமும், மனிதன் எவன் என்பதும் ஓதப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பகுதியில் வாழ்க்கையின் புறத்தூய்மைக்கும் அகத்தூய்மைக்குமுரிய முறைகளும், வாழ்வின் முடிந்த நிலை இன்னது என்பதும், அந்நிலை பெற்ற சில சத்தியாக்கிரகிகளின் வரலாறுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. மூன்றும் பகுதியில் காந்தியடிகளின் பிறப்பு, வளர்ப்பு, கல்வி, தியாகம், உண்மை, தொண்டு, அறம், அன்பு முதலியவற்றி னின்றுந் திரண்ட காந்தீயம் விளக்கப்பட்டிருக்கிறது.

இந்நூற்கண் பெண்மக்கட்குரிய பொருள், ஆண்மக்கட்குரிய பொருள், அரசியலுக்குரிய பொருள், சத்தியாக்கிரகப் பொருள், சமயப் பொருள் முதலிய பல பொருள்கள் காணலாம். இல்லறம், தியாகம், அஹிம்சை, சுயராஜ்யம், சத்தியாக்கிரகம், சமயவாழ்வு முதலியன வாசிப்போர்க் கின்பூட்டுவன. சமய வாழ்வில் சமரச சன்மார்க்க நுட்பம் மிக விளக்கமாக ஓதப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு தலைப்பின் கீழும் அடிகளின் அறவுரைகளைத் திரட்டி அவைகளை முறைப்படுத்தியுள்ள ஒழுங்கும் பொருளும் வாசிப்போர்க்கு இன்பூட்டுவதோடு நேரிய வாழ்வு நடாத்துமாறு அவரை அவைகள் தூண்டும். சன்மார்க்கத் துறைகள் பல இந்நூற்கண் பொலிதல் காணலாம்.

முருகவேள் புத்தகசாலை,

இராயப்பேட்டை, சென்னை.

## முருகவேள் பனுவல் திரட்டு

[இரண்டாம் பதிப்பு]

சுப்பிரமண்ணிய பக்தர்கள் பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்.

இதில், திருப்புகழ், திருவகுப்பு, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்தர்சஷ்டி கவசம், திருமுருகாற்றுப்படை, முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ், திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ், திருப்போரூர் சந்நிதி முறை, திருத்தணிகை சந்நிதிமுறை, கந்த புராணம், தணிகைப் புராணம், திருச்செந்தூர்ப் புராணம் முதலிய நூல்கள் அடங்கி யிருக்கின்றன. இப்பதிப்பில் பல பாக்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. உயர்ந்த காகிதம். அழகிய பயிண்டு. விலை ரூபா 1-0-0.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

40 வருஷங்களாக

ஹிமாலயத்திலிருந்து
கன்னியா குமரிவரையில்

AMRUTANJAN

அமிருதாஞ்சனம்

நவசக்தியாக
பெயர்பெற்றுவிட்டது

எல்லாவித நோய்களுக்கும், வலிகளுக்கும்
அரிய குடும்ப ஔஷதம்

அமிர்தாஞ்சன் டிபோ,
மதராஸ். கல்கத்தா, பம்பாய்.

## விளம்பரத்தால் ஏமாந்தவர்களுக்கு எச்சரிக்கை

சகோதரர்களே!

மக்கள் பலர் அறியாமையாலோ மற்றும் எக்காரணங்களாலோ தங்கள் சரீர சக்தியை இழந்து மனங்கலங்கி நிற்கும் காலத்து ஆடம்பரமான விளம்பரங்களைக் கண்டு ஆவலுடன் மருந்துகளை வரவழைத்து ஏமாற்றமடைந்து இன்னும் அதிகமாகக் கவலையுறுகின்றனர். உண்மையான ஔஷதங்கள் கிடைப்பது இக்காலத்தில் அரிதாக இருக்கின்றது. இந்தியமக்களின் கவலையை அறிந்தும், முக்கியமாக மலாய் நாட்டு அன்பர்களின் துயரை உணர்ந்துமே நமது இன்டோ மலாயன் பார்மசி இச்சென்னையில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அன்பர்கள் ஒளி மறைவின்றித் தங்கள் நோயின் விவரம் பூராவையும் நமக்கு அறிவித்தால் ஆயுர்வேத, சித்த, யூனனி முறையில் தேர்ந்த மிக்க அனுபவமுடைய டாக்டர்களைக்கொண்டு பரிசீலனை செய்து அதற்குத் தக்க ஔஷதங்கள் இன்னவென்பதையும் அதன் கிரயத்தையும் அறிவிப்போம். இறைவன் பால் நம்பிக்கை வைத்து உடனே எமக்கு எழுதுங்கள்.

விலாசம்:—இன்டோ மலாயன் பார்மசி,
நெ. 2, பிலிப்ஸ் தெரு, ஜி. டி., மதராஸ்.

## ப்ரம்ஹ ஸூத்திர சாங்கர பாஷ்யம்

[தமிழ் மொழிபெயர்ப்பு]

வெளியாகி விட்டது! வெளியாகி விட்டது!!

(பாஷ்யம் மூலம் தேவநாகரலிபியில்)

மனிதப் பிறவிக்கே முக்கியமான பயனளிக்கக்கூடியதும், இதுசாறும் வெளிவராததுமான, பிரம்மஸூத்திர சாங்கர பாஷ்யத்தின் முதலாவது ஸமன்வயாத்தியாயம் மட்டும் வெளியாகி விட்டது. புஸ்தகம் ராயல் 1-க்கு 8-ல் சுமார் 600 பக்கங்களுள்ளது. உயர்ந்த கடிதத்தில் அச்சடிக்கப் பெற்றது. கிலிட்டு எழுத்துடன் உயர்ந்த காலிகோ பைண்டு செய்யப்பட்டது. கிளேஸ் ரூ. 8. பெதர்வெயிட் ஆண்டிக் பேபர் ரூ. 10. தபால் செலவு வேறு. மேலுள்ள அத்தியாயங்களும் முறையே வெளியிடப்படும்.

கடலங்குடி நடேச சாஸ்திரியார்,
72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை.

## உலகானுபவம்

"தக்க ஆலோசனைக் கூறும் நிபுணர் இவரே"

வருங்கால சம்பவங்களைப்பற்றிய 5 கேள்விகளுக்குப் பதில் எழுத ரூ. 1-0-0. மேல் ஒவ்வொரு கேள்விக்கும் ரூ. 0-4-0. ஒரு வருஷம் வரையில் மாதவாரி பலன் எழுத ரூ. 2-0-0. 5 வருஷங்களுக்கு ரூ. 7-8-0. ஒரு வருஷம் வாரம் வாரம் முக்கிய பலன்களை எழுத ரூ. 10-0-0. வி. பி. செலவு 0-4-0. ஜாதககல் அல்லது கடிதம் எழுதும்போதுள்ள நேரம் ஏதாவதொன்றை எழுதவும்.

சென்னை "ஆந்திர பத்திரிகை" 8—2—24தேதி எழுதியதின் சாரம்சமாவது :— இவருக்கு சோதிட சாஸ்திரத்திலுள்ள திறமையை நாம் மனப் பூர்வமாகப் பொது ஜனங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

விலாசம் :— ஹனுமத்உபாஸி. வி. கே. சடகோபாச்சாரியார்,
திருத்தணி, சித்தூர் ஜில்லா, இந்தியா.

பொடியிற் சிறந்தது ராஜன் பட்டணம் பொடி

## ஆர். எஸ். சுகந்த மூக்குத்தூள்

விலை விவரங்களுக்கும் மற்றும் எங்களிடம் தயாராகும் திறுசுகளுக்கும் எழுதவும்.

தந்தி விலாசம்:— "நஸ்யம்."

பி. வி. ராஜன் & கம்பெனி,
நெ. 44, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, மதராஸ்.

## சுந்தரர் தேவாரம்

தமிழ் வேதமான தேவாரத்தை நாடெங்கும் பரவச் செய்யும் நோக்கத்துடன், சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தார் முதலில் சுந்தரர் தேவாரத்தைப் பதினாயிரம் பிரதிகள் அச்சிட்டு அடக்க விலைக்குக் கொடுப்பதென்று முடிவு செய்தனர். அச்சு வேலையும் தொடங்கப்பட்டு நடந்து வருகிறது. இரண்டு திங்களில் வேலை முடிவு பெறும். ஐந்து ரூபாய்க்குக் குறையாமல் முன் பணம் அனுப்புவோர் அன்பர்களுக்கு ரூபாய்க்கு ஐந்து பிரதிகள் விதம் அனுப்பப்படும். ரயில், தபால் செலவு வேறு. தனிப் பிரதி காலணா. தபால் செலவு இரண்டணா. தமிழ் மக்கள் இத்தத் திருப்பணியைப் பல வழிகளிலும் ஆதரிக்குமாறு வேண்டுகிறோம்.

முன் பணம் அனுப்புவோர் சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜக் காரியதரிசி, கோவிந்தப்ப நாயகர் வீதி, 150, ஸ்ரீமான் ம. பாலசுப்ரமணிய முதலியார், பி. ஏ., பி. எல். என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டும்.

ஸ்திரீகள் ஐந்து வஸ்துக்களை விரும்புகிறார்கள்

ஸ்ரீமதி அன்னு சந்தி எம். ஏ. (ஹானர்ஸ்)
ஆசிரியை, 'ஸ்ரீமதி' கோட்டயம்

பின்வருமாறு எழுதுகிறார் :—

உங்களுடைய லோத்ராவை நான் உபயோகித்துப் பார்த்தேன். மாதவிடாய் சம்பந்தமான எல்லா நோய்களுக்கும் அது கைகண்ட ஔஷதமா யிருக்கிறது. அது தித்திப்பா யிருப்பதாலும், எவ்வித பத்தியமும் அவசியமில்லை யாதலினாலும், அதை உபயோகிக்க ஒரு சந்தோஷமா யிருக்கிறது.

உங்களுடைய மருந்து வியாபாரியைக் கேளுங்கள் அல்லது கீழ்க் கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள் :—

கேசரி குடீரம்,
இந்திய மருந்து வியாபாரிகள், எழும்பூர், சென்னை.

## * தமிழ்ப் பஞ்சலக்ஷண மூலம்

பகுதி 1.

இந்நூல், தமிழபிமானிகள் பலர் விருப்பத்தின்படி சிதம்பரம் - ஸ்ரீ உலகமூர்த்தி தேசிகர் மடத்தின் பரம்பரையினராகிய வித்துவான் - ஈ. சிவப்பிரகாச தேசிகர் அவர்களால் நன்கு பரிசோதித்து, பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் வெளியிடப் பெற்றது. தாக்ஷிணாத்திய கலாநிதி, மஹா மஹோபாத்தியாய, பிரஹ்மஸ்ரீ - உ. வே. சாமிநாதையர் அவர்களின் மதிப்புரை யுள்ளது.

இதில், 1. நன்னூல், 2. இறையனாரகப் பொருள், 3. நம்பியகப் பொருள், 4. புறப்பொருள் [வெண்பாமாலை ; மூலபாடம்], 5. யாப்பருங்கலம், 6. யாப்பருங்கலக் காரிகை, 7. தண்டியலங்காரம் என்னும் இவ்வேழு நூல்களின் மூலபாடம் ஒருங்கு தொகுக்கப் பெற்றுள்ளன.

இதன்கண் தொகுக்கப் பெற்றுள்ள நூல்களையும், அவ்வந் நூலாசிரியர்களையும் பற்றிய வரலாறுகள் நன்கு ஆராய்ந்து விரித்தெழுதப் பெற்றுள்ளன. இன்றியமையாத சில அரிய குறிப்புக்களும், பாட பேதங்களும் உரிய இடங்களில் அமைக்கப் பெற்றுள்ளன.

தமிழ் மொழிக்கண் உள்ளனவாய எழுத்துச் சொற்பொருள் யாப்பணி என்னும் ஐந்திலக்கணங்களையும் நன்கு பயில விரும்புவோர்க்கு இந்நூல் இன்றியமையாததாகும்.

விலை ரூபா 1 0 0.

அநுட்டான விதி (தமிழில்) 0 2 0. தர்ப்பண விதி (தமிழில்) 0 1 0.

கிடைக்கும் இடம் :—
சந்திரோதய அண்டு கம்பெனி, கேப்பேரி போஸ்ட், மதராஸ்.
இராமலிங்க ஓதுவார், ப. மு. தேவார பாடசாலை, சிதம்பரம்.

* இதன் இரண்டாம் பகுதி விரைவில் வெளியாகும்.

சென்னை அரசாங்க
சுகாதாரமந்திரி அவர்களாலும்,
அநேக ஜமீன்தார்,
பிரபுக்கள், ஜட்ஜுகள்,
வக்கீல்கள், டாக்டர்களாலும்,

DANDAPANI VAITHYASALAI MADRAS

தங்க மெடல்களும்
நற்சாக்ஷிகளும் பெற்ற
தண்டபாணி
வைத்திய சாலையின்
மருந்துகள்.

# மஹா மன்மத சிந்தாமணி லேகியம்.

இந்த லேகியத்தில் முறைப்படி சுத்திசெய்த 108-வகை சரக்குகளும், அநேக வித்து வகைகளும், பிசின்களும் சாலாமிசிரி முதலான அநேக சரக்குகளும், பால், சீனி, நெய், தேன் முதலியனவும் சேர்த்து லேகிய பாகமாய் செய்யப்பட்ட ஔஷதம். இதற்குப் பத்தியம் கிடையாது. இது, இழந்த பலத்தைத் தந்து தேகக் கட்டையும் தேஜஸையும் கொடுக்கக் கூடிய அருமருந்து.

இந்த லேகியத்தை சுண்டக்காயளவு தினந்தோறும் சாப்பிட்டுக்கொண்டு வருபவர்களுக்கு வாதபித்த சிலேத்மங்களை ஒன்றுக்கொன்று மீறவிடாமல் சமப்படுத்தி நாடி நரம்புகளுக்கு வலுவைக்கொடுத்து மூளையை விர்த்திசெய்து இந்திரியத்தைக் கெட்டிப்படுத்தி, அறிவுச் சுடருண்டாக்கி, மனதிற்கு அதிக சந்தோஷத்தையும், ஆனந்தத்தையும் கொடுக்கும்.

நீடித்த வியாதியினால் பீடிக்கப்பட்டு ஜீர்ணசக்தியும், ருசிகாமும் குறைந்தவர்களுக்கும், திரேகம் பலவீனப்பட்டவர்களுக்கும், இடுப்பு வாய்வு, கீல்வாய்வு முதலான வாய்வு ரோகஸ்தர்களுக்கும், இருமல், இளைப்பு முதலிய கப சம்பந்தமான ரோகஸ்தர்களுக்கும், அதிகமான ஆகாரமும், போகமும் விரும்புவோருக்கும், தூக்கமில்லாதவர்களுக்கும், சதா வியாகூலமடைந்தவர்களுக்கும், சொற்பன ஸ்கலிதமுண்டாகும் பால்யர்களுக்கும், நற்சிந்தையை வேண்டுபவர்களுக்கும், ஞானவான்களுக்கும், உபயோகப்படக்கூடிய பரமானந்த ஔஷதம் இது ஒன்றே. ஒருசேர் ஒரு மண்டலத்துக்கு உபயோகிக்கலாம்.

(1-ம் நெ. லேகியம் ஒரு சேர் டின் ரூ. 3.) (2-ம் நெ. லேகியம் ஒரு சேர் டின் ரூ. 2.)

## அமிர்தம்.

குடலைப்பற்றிய எல்லா வியாதிகளையும் போக்கும்- அன்றாடம் மலப் பிரவர்த்தியைக் கிரமமாய் வெளிப்படுத்தி மூலாதார உஷ்ணம், மூலவியாதிகள் முதலிய எல்லா வியாதிகளையும் போக்கும்.

1-சேர் டின் ரூ. 2.

## பிரமேக நிவாரணி.

பெண்ணோய் சம்பந்தமான எல்லாவித கொடு நோய்களையும் நீர்க்கடுப்பு வியாதிகளையும் உடனே குணப்படுத்தக் கூடியது.

9-வேளை மருந்து புட்டி 1-க்கு ரூ. 2—4—0.

## அமிர்தரசம்.

சகல நோய்களுக்கும், வலிகளுக்கும், உள்ளுக்கும், மேலுக்கும் உபயோகிக்கக் கூடியது. துளிக்கணக்கில் உபயோகிக்க மணிக்கணக்கில் சுகம் பெறலாம்.

காலரா, பிளேக், ஜுரம் முதலிய எல்லா வியாதிகளையும் போக்கும். புட்டி 1-க்கு ரூ. 1-8-0.

## வில்வாதி தைலம்.

இத்தைலம், வாரத்திற்கு இருமுறை ஸ்நானம் செய்துவந்தால் மூளையைக் குளிர்ச்சிசெய்து சிரசைப் பற்றிய எல்லா வியாதிகளையும் போக்கும்.

| | | |
|---|---|---|
| 6 அவுன்ஸ் டின் 1-க்கு ரூபா | | 1—3—0. |
| 12 | ,, ,, | 2—4—0. |
| 24 | ,, ,, | 4—0—0. |

[வி. பி. வேறு.] அன்னியநாட்டார் தபால் செலவு உள்பட முன்பணம் அனுப்பவேண்டியது.

குறிப்பு:—சகலநோய்களுக்கும் ஸ்நானபான அநுபான பத்தியமுறைகளுடன் கூடிய மருந்துகளும், பல நற்சாக்ஷிப் பத்திரங்களும் அடங்கிய விபரமான பெரிய கேட்லாக் கேட்போருக்கு இனமாய் அனுப்பப்படும்.

தண்டபாணி வைத்தியசாலை, தபால்பெட்டி 292, சைனுபஜார், மதராஸ்.



## புதிய இங்கிலீஷ் சம்பாஷணை புத்தகங்கள்.

மூன்றுமாத காலத்திற்குள் இங்கிலீஷில் சம்பாஷிக்கலாம். நான்கு பாகங்கள் அடங்கியது. இங்கிலீஷ் வாக்கியங்களுக்குத் தமிழ் அர்த்தத்துடனும், ஒவ்வொரு பாடத்தின் அடியில் ஏராளமான அப்பியாசங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. புதிய போதனா முறைகளை அனுசரித்து எழுதப்பட்டிருக்கின்றது. இந்த நான்கு புத்தகங்களையும் படித்தால் மெட்ரிகுலேஷன் வகுப்பு மாணுக்களை விட அதிகமாக இங்கிலீஷில் சம்பாஷிக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1-வது பாகம் விலை ரூபா | 0 | 8 | 0 |
| 2 ,, ,, | 0 | 8 | 0 |
| 3 ,, ,, | 0 | 10 | 0 |
| பாலபோதினி ,, | 0 | 4 | 0 |
| 4 ஸ்வபோதினி இங்கிலீஷ் இலக்கணம் ,, | 1 | 0 | 0 |

☞ நான்கு பாகமும் தனித் தனியாய் அனுப்பத் தபால் சார்ஜ் அணு 0—6—0.

ஸவபோதினி இலக்கணத்துடன் எல்லா பாகங்களின் (ஒரு செட்) விலை வி. பி. உள்பட ரூபா 3—6—0. உடனே ஆர்டர் செய்யுங்கள்.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.



## DINNERS

of all kinds are undertaken at short notice. Apply sharp to:

N. S. RAMULU,
10, Iswardosslala Street, Triplicane.



எட்டாம்பதிப்பு! வெளியாய் விட்டது!

## சரீர மர்ம சாஸ்திரம்

இந்த அருமையான நூலில் ஸ்திரீ, புருஷர் அனுபவிக்க வேண்டிய சம்சார சுகங்கள், குடும்ப ரஹசியம், மணவாழ்க்கையின் மர்மங்கள் ஆகிய அனைத்தும் ததும்பிக் கிடக்கின்றன. 64 படங்களுடன் 200 பக்கங்கள் கொண்ட பெரிய புஸ்தகம் 1-க்கு விலை ரூபா 1.

எல்லாப் புஸ்தக வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மாணிக்க விலாசம் பிரஸ்,
அருணாசல முதலி வீதி, சென்னை.



# வியாசங்கள்!

வியாசங்கள்!! வியாசங்கள்!!!

வியாசங்களை மிக எளிதில் அறிந்து அதன்படி நடந்து நன்மை யடையக் கூடிய விதமாக எழுதப்பட்டுள்ளன.

கீழ்க்கண்ட வியாசங்கள் ஒவ்வொரு தமிழரும் வாங்கி வாசித்துப் பயனடையக் கூடியனவாகும்.

நமது முன்னோர்களுடைய உபதேசங்கள் பலவற்றை நம்மில் பலர் அறியாமலிருக்கிறார்கள். காரணம், அவை யாவும் செய்யுளாக இருப்பதினால். இந்த வியாசங்கள் அச்செய்யுட்களையே பெரும்பாலும் தழுவி வசனமாக எழுதப்பட்டிருக்கின்றன.

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| அன்பு | 0 | 1 | பொது மதம் | 0 | 2 |
| பலவகை மனிதர் | 0 | 1 | ஆருத்ராம் | 0 | 2 |
| தவம் | 0 | 1 | சந்தேகம் | 0 | 2 |
| பொறுமை | 0 | 1 | கற்பு | 0 | 3 |
| இருவினை | 0 | 2 | அஸ்தபூஷணம் | 0 | 4 |
| இல்லறம் | 0 | 2 | பதினறுபேறு | 0 | 4 |
| ஆலயவழிபாடு | 0 | 2 | என் தந்தையார் | 0 | 6 |

மேல்கண்ட பதினன்கு புத்தகங்களும் ஒரே தடவையில் வாங்குபவர்களுக்கு ரூபாய் இரண்டுக்குக் கொடுக்கப்படும்.

தபால் சார்ஜ இனம்! இன்றே எழுதுங்கள்.

நவீனகதா புத்தகசாலை,
122, மங்கமாரி வீதி, இரங்கூன்.



திருப்போரூர்ச்
சந்நிதிமுறைத்திரட்டும், அரும்பதவுரையும்

கிளேஸ், அணு 5; ரப் அணு 3.

வேண்டுவோர் விலைக்கு மேல் ஒரு அணு தபால் தலை சேர்த்து அனுப்பினால் புத்தகம் அனுப்பப்படும்.

முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.



கும்பகோணம் தென் இந்தியா கன்பெக்ஷனரி
பாக்டரியில் தயாரிக்கப்படும்

# பெப்பர்மெண்டையே உபயோகியுங்கள்

# என்?

என் எனில் இந்திய மூலதனத்தைக்கொண்டு இந்தியர்களால் நடத்தப்படும் தொழிற்சாலை இதுவே. வெகு கீர்த்தியானவை என்று புகழ்ப்பெற்றது. விலை வெகு நயம். ஒரு முறை தருவித்துப்பாருங்கள். உண்மை விளங்கும். விலை விபரத்திற்கு உடனே எழுதுங்கள்.

THE SOUTHERN INDIA CONFECTIONERY FACTORY,
Kumbakonam.



# பிரபல ஜோதிஷர்

மஹாராஜாக்களாலும், பிரபுக்களாலும், அநேக தங்கமெடல்களும் ஆயிரக் கணக்கான நற்சாக்ஷி பத்திரங்களும் பரிசளிக்கப்பட்டவர். ஒரு ஜாதகம் குறிக்க ரூ. 2. ஒரு ஜாதகத்தின் திரிகால பலன்களையும் விபரமாக நேரில் சொல்வதற்கு ரூ. 5. 1 வருட பலன் விபரமாக யெழுத ரூ. 5. ஆரூடம் எதிர்காலத்தைப் பற்றிய 3-கேள்விகளுக்கு ரூ. 1. மேலே கேள்வி ஒவ்வொன்றுக்கும் அணு. 8. (ஜாதகமாவது லெட்டர் எழுதும் நேரமாவது தேவை.)

பண்டிட்-காழியூர் ம. ஸ்ரீனிவாஸாசாரியார், 218, தங்கசாலைவீதி, மதராஸ்.



## பெரிய வேலை எது?

ATANK-NIGRAH PHARMACY.
ATANK NIGRAH PILLS.
RE. 1 FOR A BOX OF 32 PILLS.

நோய்க்கிடங்கொடாமல் சரீரத்தைக் காப்பாற்றிக் கொள்வதே பெரிய வேலை. சரீரத்தில் எவ்வித மாறுபாடு ஏற்படினும் ஆதங்க நிக்ரஹ மாத்திரைகளை உபயோகப்படுத்துங்கள். 32 மாத்திரைகள் அடங்கிய டப்பி 1-க்கு ரூபா 1.

இனம்! காமசாஸ்திரம் இனம்!!

ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம்,
26, பிராட்வே, மதராஸ்.


Printed and Published by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudaly St., Royapettah, Madras.

